








# இவர்கள் வீட்டில் தீபாவளி

கற்பனை: ஜாலி　　படம்: செல்லம்











✱ ஆத்யந்த பிரபு

# ஆனந்த விநாயகரின் அழகுத் திருக்கோயில்



✱ ஆனந்த விநாயகர் உற்சவரும் மூலவர்களும்

**சா**லையோரங்களில் எத்தனையோ பிள்ளையார் சிலைகள் மரத்தடிகளில் 'கோவில்' கொண்டிருக்கும். ஆனால் அடையார், சர்தார் படேல் சாலையில் அரசமரத் தடியில் சின்ன மண்டபத்தில் பிளாட்பார விநாயகராக இருந்த ஆனந்த விநாய கருக்கு வாய்த்த யோகம் மாதிரி ஆகுமோ?

இன்று சாலையோரம் சுத்தமாக நடைபாதையோடு விளங்குகிறது. 'மத்ய கைலாஸ்' என்று மும்மொழிகளில் நியான் விளக்குகள் பிரகடனப்படுத்திக் கொண்டு அற்புதமான ஆலய வளாகம் பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருக்கிறது. சூழ் நிலையின் சுத்தம் புனிதமான உணர்வு களைத் தூண்டி விடுகிறது.

மத்ய கைலாஸில் எத்தனையோ புது மைகள். பிளாட்பார விநாயகருக்கு அழ கான ஆலயம் எடுப்பித்தவர் டாக்டர் எம்.ஏ.எம். காஞ்சிப் பெரியவரின் அருட் தூண்டுதலினால் 'காணாபத்ய பஞ்சாயதன வளாகம்' என்று இந்த ஆலயத்தை உரு வாக்கியிருக்கிறார்கள். இந்த மரபின்படி ஓங்கார வடிவினனான - நாதஸ்வரூபியான - விநாயகப் பெருமானை மையப்படுத்தி, அவருக்கு நான்கு புறமும் நான்கு தனித் தனித் திருக்கோவில்களில் பரமேசுவரன், ஆதித்ய மூர்த்தி, அம்பிகை, மகாவிஷ்ணு.. அருள்பாலிக்கிறார்கள். இவர்களே வேத முதல்வனை வழிபடுவதாக ஒரு தத்துவம்.

இந்த சந்நிதிகளில் உற்சவ விக்கிரகங்க ளாக இடம் பெற்றிருக்கிறவர்கள் திரு வெண்காட்டு இறைவன் சுவேத மூர்த்தி, திருக்கடையூர் அபிராமி அம்மன், மன்னார் குடி இராஜகோபால சுவாமி - செங்கமலத் தாயார் இவர்கள்தாம். இந்த விக்கிரகங்கள் யாவுமே நாச்சியார் கோயில், சுவாமிமலை, ஸ்தபதிகளால் செய்யப்பட்டு, பூம்புகார் நிறுவனம் மூலம் தருவிக்கப்பட்டன.

நாதஸ்வரூபி என்கிற வழக்குக்கு ஏற்ப ஆனந்த விநாயகரின் சந்நிதியில் மேலே சப்தஸ்வரங்களை இனிமையாக அதிர்விக் கும் மணிகளை அமைத்திருக்கும் பாங்கைப் பாராட்டத்தான் வேண்டும். ஆனந்த விநா யகர் சந்நிதியிலேயே இடப்புறத்தில் ஆறு

✱ அம்பிகை



✱ மகாவிஷ்ணு



படை வீடுகளின் நாயகர்களையும் உற்சவ மூர்த்தியாக ஒரே பீடத்தில் தரிசித்து ஆனந்திக்க முடிவது மிகப் பெரிய பேறு.

**க**டந்த பத்து ஆண்டுகளில் சிறப்பான வளர்ச்சி பெற்று அனைவரின் கவனத்தை



● அறுபடை வீடுகளின் நாயகர்கள்

யும் ஈர்க்கும் வண்ணம் விளங்கிவருகிறது மத்ய கைலாஸ்.

காணாபத்ய பஞ்சாயதன மரபுக்கு அப்பாற்பட்டு, பக்தர்களின் வேண்டு கோளை ஏற்று நவக்கிரக சந்நிதி, ஆஞ்ச நேயர் சந்நிதி, ஸ்வர்ண பைரவர் என்றும் உருவாக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு கோவிலும் ஒவ்வொரு பிரமுகரின் நன் கொடையாக உருவாகியுள்ளது. ஒரே சிற்ப வடிவில் ஆஞ்சநேயர் விநாயகப் பெருமான் ஆகிய இருவரையும் ஒன்றாக இணைத்து 'ஆத்யந்தப் பிரபு' என்ற ஒரு ஸ்வாமி யையும் வடிவமைத்திருக்கிறார்கள். விரை வில் இத்திருப்பணி நிறைவடையவிருக் கிறது. ஆத்யந்தப் பிரபுவின் படங்கள் மட்டும் இப்போது விற்பனைக்குக் கிடைக் கின்றன.

**எ**ல்லாத் திரு விழாக்களும், ஸ்ரீராம நவமி, நவராத்திரி, சிவ ராத்திரி, சங்கராந்தி, பகல் பத்து, ராப்பத்து பிர தோஷம் உட்பட வெகு விமரிசையாய்க் கொண்



● சபேசமூர்த்தி

டாடப்படுகின்றன. திருவிழா இல்லாத நாளே இல்லை என்னும்படி சைவ வைணவ பக்தர்கள் அனைவருக்கும் நிறை வளிக்கும் திருக்கோவிலாய் இது விளங்கி வருகிறது. விநாயக சதுர்த்திக்கு முந்தைய நாள் மகா கணபதி மூலமந்திர ஜபம், ஹோமம் நடைபெறுகின்றன. மாலை மூன்று மணிக்கு ஆயிரத்தெட்டு சங்குகள் மூலம் அபிஷேக ஆராதனைகள் நடை பெறுவதும் தனிச் சிறப்பான அம்சம். சங்க ராந்தியின் போது சூர்ய பகவான் சந்நிதியில் விசேஷ பூஜைகள் உண்டு.

**டா**க்டர் எம்.ஏ.எம். ராமசாமியையும் பா. சிவந்தி ஆதித்தனையும் ஆயுட்காலப் புரவலர்களாகக் கொண்டு இயங்கும் இந்த ஆலயம் புனித யாத்திரை மேற்கொள் வோருக்கு எல்லா உதவிகளையும் செய்யும் திட்டமும் வைத்துள்ளது. தென்னகக் கோவில்களில் மிக முக்கியமானவற்றைப் பற்றிய பயணக்குறிப்புகள், பாதைகள் விவரம் அச்சிட்டு வழங்குவது, யாத்ரிகர்கள் ஒன்றிரண்டு நாட்கள் தங்கிப் புனிதப் பயணம் மேற்கொள்ள மத்ய கைலாஸை ஒட்டி விடுதிகள் கட்டுவது என அவை விரி கின்றன....




● கோவில் தோற்றம்

சூர்யபகவான் சந்நிதிக்கு எதிரே பரமேசுவரன் சந்நிதி. தென்புறத்தில் வளமான ஓர் ஆலமரம். இப்படி அமைவது மிகவும் விசேஷமாம். சிரார்த்த காரியங்களுக்கு ஏற்ற அமைப்பாக இதைச் சொல்கிறார்கள். உடுப்பி ஆசார்ய ஸ்வாமிகள் இதை 'தக்ஷிண கயா' என்றே குறிப்பிட்டாராம். இங்கே பித்ரு கர்மாக்கள் செய்வதற்கு வேத முதல்வனான விநாயகப் பெருமானே சரியான நபராகச் செயல்படுகிறார். ஆனந்த விநாயகர் சந்நிதியில் தர்ப்பைக் கட்டைச் சமர்ப்பித்து ஆணை பெற்றுக் கொண்டு புரோகிதர்கள் பித்ருகர்மாக்களைச் செய்து வைக்கிறார்கள். ஜாதி பேதம் எல்லாம் கிடையாது. வெளிநாட்டில் வாழ்கிறவர்கள், மருத்துவ மனைகள், சிறைச்சாலைகள், போர்ப் படைகளில் பணியாற்றுவோர், முதியோர் இல்லங்களில் இருப்போர் என்று பலதரப்பட்ட ஹிந்துக்களுக்கும் 'பித்ரு கர்மாக்களை நிறைவேற்ற முடியவில்லையே' என்கிற ஏக்கத்தைத் தீர்த்து வைக்கும் அறப்பணியாக மத்யகைலாஸில் பித்ரு காரியங்களை நிறைவேற்றிப் பிண்டங்கள் அர்ப்பணித்து, அப்புறம் ஆனந்த விநாயகருக்குக் கர்த்தாக்களின் சார்பில் அர்ச்சனையும் பண்ணிப் பிரசாதங்கள் வழங்குகிறார்கள்.

'ஒரே முறை செலுத்தும் கட்டணம்' (One Time Payment) என்னும் முறையில் இந்த அமைப்புக்குத் தொகை செலுத்தி விட்டால் பரம்பரையாகத் தொடர்ந்து இந்த அறப்பணி, குறிப்பிட்ட நபருக்காகச் செய்யப்படும் வசதியை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

இதை மகான் சின்மயானந்தா குறிப்பிட்டவாறு 'The Greatest Boon to a Fast Moving Society' என்றுதான் சொல்ல வேண்டும்.

– கலைசைக்கிழார்

படங்கள் : பாலாஜி.






# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த சீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

**எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி சீரியல்.**

## நெஸ்டம்

**முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப் பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்.**



# வை.கோ.: தலைமைப் பொறுப்புக்குத் தகுதியானவர்தானா?

**கோ**பால்சாமி சொல்லும் பல விஷயங்கள் சர்ச்சைக்குரியவையாக இருந்தாலும், எந்த நிலையிலும் தமது கருத்துக்களை எடுத்துச் சொல்லச் சற்றும் தயங்காதவர், அவர். நாடாளுமன்றமாக இருந்தாலும் சரி, நாகர்கோயிலில் நடக்கும் பொதுக் கூட்டமாக இருந்தாலும் சரி, காட்டாறு போல் கருத்துக்கள் பாய்ந்து வருகின்றன.

தி.மு.க. பொதுக் கூட்டங்களில் பேச்சாளர்கள் வை.கோ. பெயரைப் பேச்சுவாக்கில் குறிப்பிடும் போதே, தொண்டன் மின்சாரம் உடலில் பட்டது போல் சிலிர்த்துக் கொண்டு கை தட்டுகிறான். வை.கோ. கலந்து கொள்ளும் கூட்டங்களிலோ, கேட்கவே வேண்டாம். அவர் எழுந்தாலும், உட்கார்ந்தாலும் தொண்டர்கள் கைதட்டிக் கொண்டே இருப்பார்கள். பல பெரிய தலைகள் கலந்து கொள்ளும் கூட்டங்களில் நடுவில் வந்து ஒரு சலசலப்பை ஏற்படுத்துகிறார்.

முன்னணித் தலைவர்கள் இதனால் முகம் சுளித்துக் கொள்வது தவிர்க்க முடியாததாகிறது. இந்த நிலையில் தலைமைப் பதவிக்கு வை.கோ. தகுதியானவர்தானா? என்ற ரகசிய பட்டிமன்றம் கழக வட்டாரங்களில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. காரணம், விடுதலைப் புலிகளிடம் இவருக்கு உள்ள அனுதாபம்.

**நா**ற்பத்தேழு வயதாகும் வை.கோவுக்குச் சொந்த ஊர் கோவில்பட்டி அருகிலுள்ள கலிங்கப்பட்டி. அப்பா வையாபுரி நாயுடு காங்கிரஸ் கட்சியில் இருந்தாலும் ராஜாஜி சுதந்திரா கட்சி ஆரம்பித்ததும், அவரடி ஒற்றி நடக்க ஆரம்பித்தார். பாளை செயிண்ட் சேவியர் கல்லூரியில் படிப்பைத் தொடர்ந்தார் வை.கோ. பின்னர் சென்னையில் சட்டம் பயின்று, மாநிலக் கல்லூரியில் பட்ட மேற்படிப்பையும் முடித்தார். பெற்றோர்கள் பார்த்து நடத்தி வைத்த திருமணம். மனைவி ரேணுகா தேவி. நெடுஞ்செழியன் தலைமையில் குற்றாலத்தில் நடந்தது கல்யாணம்.

எட்டு வயதாக இருக்கும்போதே மேடையில் முழங்க ஆரம்பித்து விட்டார் வை.கோ. பூதான இயக்கத்தை வாழ்த்தி, அதிக நிலம் வைத்திருப்பவர்கள் ஏழைகளுக்குப் பங்கு போட்டுக் கொடுக்க வேண்டும் என்று அந்த வயதில் பேசியது குடும்பத்தாரைக் கலக்கியது. அதற்குப் பிறகு பள்ளி, கல்லூரிகளில் பேச்சுப் போட்டிகளில் எத்தனையோ பரிசுகள். இன்று மேடையில்

வை.கோ. பேசும் போது தென்றலும், புயலும் மாறி, மாறி அடிக்கின்றன. தொடக்கத்தில் கலைஞரைப் புகழ்ந்து பதினைந்து நிமிடமாவது பேசுகிறார். பின்னர்தான் ஆளும்கட்சியைப் பற்றியும், முதல்வர் ஜெ பற்றியும் விமர்சனங்கள். 'புஜபல பராக்கிரமம், பூரண சந்திரன், பாதாரிகேசம், பட்டாளத்துச் சிப்பாய் போன்ற வடமொழி வார்த்தைகள் சரளமாக வரும். போதாததற்கு, மகாபாரதம், ராமாயணம் போன்றவற்றிலிருந்து உதாரணங்கள். தோளிலிருக்கும் கறுப்புத் துண்டை அடிக்கடி எடுத்து உதறி, தோளிலேயே போட்டுக் கொள்ளும் பழக்கம்.

பஞ்சாயத்தில் துவங்கி, பாராளுமன்றம் வரை சென்றிருப்பவர் வை.கோ. இப்போது சுப்ரீம் கோர்ட் நீதிபதியாக இருக்கும் ரத்தினவேல் பாண்டியன் 1960களில் நெல்லை மாவட்ட கழகச் செயலாளராக இருந்தவர். பின்னர் அவர் அரசியலை விட்டு நீதித் துறைக்கே சென்று விட்டார். தொழிலில் அவரது ஜூனியராக இருந்தது அல்லாமல், அரசியலிலும், அவரது வாரிசாக இருப்பவர் வை.கோ. குருவிக்குளம் பஞ்சாயத்து யூனியன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதுதான் அவர் வகித்த முதல் பதவி. பல பொறுப்புகளைக் கழகத்தில் வகித்தவர். 1978ல் முதன் முதலாகக் கழகத்தின் சார்பாக ராஜ்ய சபைக்கு அனுப்பப்பட்டவர் இன்றும், தொடர்கிறார். 'எந்தத் தேர்தலிலும் நின்று வெற்றி பெறாதவர்' என்ற குற்றச்சாட்டு இவர் பேரில் உண்டு.

ராஜ்ய சபையில் இந்தியில் தீர்மான நகல்கள் கொடுக்கப்பட்ட போது, அதை எதிர்த்து நகல்களைக் கிழித்துப் போட்டு, பரபரப்பு உண்டாக்கினார் வை.கோ. எம்.ஜி.ஆர். ஆட்சியில், தமது தபால்கள் சென்சார் செய்யப்படுவதாகக் கூறி உரிமைப் பிரச்னை கொண்டு வந்தவரும் வை.கோ.தான். பாராளுமன்றத்தில் பலமுறை இவர் பேசிய போது கொந்தளிப்புகள் ஏற்பட்டுள்ளன. ''வட்டாரப் பற்றை ஏற்றுக் கொண்டால்தான் ஒருமைப்பாடு நிலைக்கும். மாநிலக் கட்சிகள் நாட்டிற்குச் சாபக்கேடு என்று சொன்னால் அது தவறு'' என்று முழங்கினார் ஒருமுறை. ''தமிழகத்திற்குப் பயன்தரக்கூடிய திட்டங்களுக்கு மத்திய அரசு அனுமதி அளிக்காமல் காலதாமதம் செய்கிறது'' என்று குற்றச்சாட்டு சுமத்தி விட்டு, ''ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் இருக்கிற டில்லி பாதுஷாக்கள் எங்களை இரண்டாம்தரக் குடிமக்களாகக் கருதுகிறார்கள். டில்லியின் காலனியாகத் தமிழ்நாடு மாறி விட்டது'' என்று ஆவேசத்துடன் இவர் சொல்லி முடித்த போது, அவை திகைப்பில் ஆழ்ந்தது.

தி.மு.க. விடுதலைப் புலிகளுடன் நெருங்கிய உறவு கொண்டிருக்கிறது என்ற குற்றச்சாட்டு இன்று பலமாக ஒலித்துக் கொண்டிருக்கிறது. இந்த குற்றச்சாட்டில் உண்மையிருக்கும் என்று மக்கள் நம்புவதற்குக் காரணம் வை.கோ. என்பதில் சந்தேகமில்லை. பாராளுமன்றத்தில் புலிகளை ஆதரித்து இவர் பலமுறை பேசியிருக்கிறார். இலங்கைப் போராளிகள் விஷயத்தில், தி.மு.க. தலைமை எந்த நிலை எடுத்தாலும், வை.கோ.வின் புலிகள் ஆதரவு நிலை ஒருபோதும் மாறுவதில்லை. 1989ல் தி.மு.க. தலைமைக்குத் தெரியாமல் இலங்கைக்குச் சென்று வந்தது, தேசிய அளவில் பரபரப்பை உண்டாக்கியது. அன்று ஆண்டு கொண்டிருந்த கலைஞருக்கு மிகுந்த சங்கடத்தையும் தோற்றுவித்தது. 'கட்சியை விட்டு இவர் நீக்கப்பட வேண்டும் என்று குரல்கள் எழுந்த போது, பிரச்னையை ஆறப் போட்டவர் கலைஞர். சிவகாசி தேர்தலில் பிரபாகரன் - மாத்தையா படங்களைத் தன் படத்துடன் இணைத்து வோட்டுக் கேட்டவர் வை.கோ. பதிமூன்று ஆண்டு கால வனவாசத்திற்குப் பின் ஆட்சிக்கு வந்த தி.மு.க. இரண்டாண்டுகளுக்குள், புலிகளின் தொடர்பு என்ற குற்றச்சாட்டால் ஆட்சியை இழந்தது. அந்த இழப்புக்குக் கணிசமான பங்கு ஏற்க வேண்டியவர் வை.கோ. என்றாலும் இன்னும் கலைஞரின் பாசமிகு தம்பியாக வளைய வருகிறார். ஒருமுறை வை.கோ. உடல்நலமில்லாமல் வேலூர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருந்தார். அதைக் கேள்விப்பட்டுத் துடிதுடித்துப் போனார் கலைஞர். வை.கோ. குணமாகி வந்தவுடன் சொன்னார் : ''அந்த நோய் நன்றிக்குரியது. காரணம் அது வரை தம்பிக்கு அண்ணனாக இருந்த நான் தாயுமானேன்.''

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் 1965இல் சிறை சென்றது முதல், பலமுறை சிறைச் சாலைகளைக் கண்டவர் வை.கோ. எமர்ஜென்சியின் போது ஒரு வருடம் 'உள்ளே' வைக்கப்பட்டவர்.

கோபால்சாமியின் தாய்மொழி தெலுங்காக இருந்தாலும், பேச்சும், மூச்சும் தமிழ்தான். உறவினர்கள் தெலுங்கில் மாட்லாடினாலும் வை.கோ. தமிழில்தான் பதில் சொல்லுவார்.

செஞ்சி ராமச்சந்திரன், மதுராந்தகம் ஆறுமுகம், வீரபாண்டி ஆறுமுகம் என்று பல தி. மு. க. மாவட்டச் செயலாளர்கள் வை.கோ.வுக்கு ரொம்ப நெருக்கம். வை.கோவின் இமேஜை உயர்த்தும் பணியில் ஈடுபட்டிருக்கும் இன்னொருவர் 'தினகரன்' கே. பி. கந்தசாமி.

தமக்குக் கொம்பு சீவி விடப்படுவது பற்றி முற்றிலும் நன்றாக உணர்ந்து அடக்கி வாசிக்கிறார் வை.கோ. பத்திரிகை நண்பர்கள் பேட்டி என்றால் பிடி கொடாமல் நழுவி விடுகிறார். மதுரையில் பவள விழா மாநாடு ஊர்வலத்தில் ''வை. கோ. தற்கொலைப் படை'' என்று சிலர் வந்தார்கள். இதைக் கண்ட கலைஞருக்கு முகம் சிவந்து போயிற்று. தமது ஒவ்வொரு செயலும் தலைமையால் கண்காணிக்கப்படுவது வை.கோவுக்கு நன்றாகவே தெரிகிறது. ஊர்வலங்களில் வரும் தொண்டர்கள், குறிப்பாக நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள், தம் புகழ் பாடக் கூடாது என்று ரகசியமாக வை.கோ சொல்லி வைத்தாலும், மேடையில் அவரைக் கண்டவுடன் உற்சாகத்துடன் குரல் கொடுக்கிறார்கள் தொண்டர்கள்.

என்றாலும் உணர்ச்சிவயப்பட்ட நிலையிலேயே எப்போதும் உரையாடும் வை.கோ. எதிர்காலத்தில் தலைமைப் பொறுப்புக்குத் தகுதியானவராக இருப்பாரா? மக்களின் ஆதரவை முழுவதும் இழந்து விட்ட புலிகளை ஆதரிக்கும் வை.கோ. வால், கழகத்திற்குச் செல்வாக்கைத் தேடித் தர முடியுமா? என்ற இரு கேள்விகள்தாம் வை.கோ.வுக்குத் தடையாக நிற்கின்றன.

- ப்ரியன்

---

## டிஸ்கோ நவராத்திரி!



பாந்த்ரா ஸ்டேஷன்

●● நவராத்திரியையொட்டி நட்சத்திர ஹோட்டல்களில் கூட சிறப்பு நிகழ்ச்சிகள் நடக்கின்றன பம்பாயில்! 'தாண்டியா ராஸ்' எனப்படும் குஜராத்தி கோலாட்டத்தை நவீனமாக 'டிஸ்கோ தாண்டியா' என்ற பெயரில் நட்சத்திர ஹோட்டல்கள் நடத்துகின்றன. இரவு பத்து மணிக்குமேல் ஆரம்பித்து, பன்னிரண்டு மணிக்குச் சூடு பிடித்து, இரண்டு மணிக்கு ஆரத்தி எடுப்பதோடு நிறைவுறும் இந்நிகழ்ச்சி!

பொது மக்களுக்கு இடையூறாக இருப்பதால் இரவு பன்னிரண்டரையோடு இந்நிகழ்ச்சியை முடித்துக் கொள்ள வேண்டும் என இவ்வாண்டு காவல் துறையினர் கட்டுப்பாடு விதித்தபோது அதற்கு எக்கச்சக்க எதிர்ப்பு எழுந்தது....!

●● பாந்த்ரா ஸ்டேஷனின் பராமரிப்பை ஒரு விளம்பர நிறுவனத்திடம் ஒப்படைத்துள்ளது ரயில்வே இலாகா. இந்த ஏற்பாட்டின்படி, இந்த நிறுவனம் ரயில்வே இலாகாவுக்கு ஆண்டொன்றுக்கு மூன்று லட்சம் ரூபாய் வழங்கும். பாந்த்ரா ஸ்டேஷன் பிளாட்ஃபாரம், கழிப்பறைகள், தோட்டம், இத்யாதிகளைப் பராமரிக்கும் பொறுப்போடு அங்கே விளம்பரம் செய்யும் ஏகோபித்த உரிமையையும் பெறுகிறது அத் தனியார் நிறுவனம்.

இந்த ஏற்பாடு வெற்றிகரமாகச் செயல்பட்டால் இந்தியா முழுவதிலுமே இதனைப் படிப்படியாக அமுலுக்குக் கொண்டு வருவார்களாம்.

●● ஏர்-இந்தியா சென்ற வருடம் தனது சின்னத்தை மாற்றியது நினைவிருக்கும் - கிரேக்க பழங்கதைகளில் இடம் பெற்றுள்ள பாதி மனிதன் பாதி குதிரை உருவச் சின்னம் (Centaur) நீக்கப்பட்டு, சூரியன் சின்னம் அறிமுகப்படுத்தப்பட்டது. இப்போது சூரியன் மீண்டும் சென்டாருக்கு வழிவிட்டு விலகியுள்ளது! ஏர்-இந்தியா தலைமை அலுவலகக் கட்டட உச்சியில் மீண்டும் ஏறிக்கொண்டு பம்பாயைப் பார்வையிடுகிறார் - 'சென்டார்'. சென்ற ஆண்டு ஏராளமாகச் செலவழித்து சென்டாரைச் சூரியனாக்கியதுதான் மிச்சம்!

- அம்ருதா பார்த்தசாரதி

**பம்பாய்க் கடிதம்**

# சக்கரவர்த்தித் திருமகன்

## 1. வால்மீகியும் கம்பரும்

ஆண்டவன் விளையாட்டின் ரகசியத்தை யாரே அறிவார்! நம் செயல்கள் அனைத்தும் அவ் விளையாட்டில் அடங்கிய அற்ப பாகங்கள். வால்மீகி பாடிய ராம சரித்திரத்தைத் தமிழ் மக்களுக்கு எளிய பேச்சு நடையில் சொல்லலாம் என்று எண்ணி ஆரம்பிக்கிறேன். கம்பர் பாடிய அவையடக்கத்தை வைத்துச் சொல்லுகிறேன்: பெரும் பாற்கடலை ஒரு பூனையானது மெள்ள உருட்டிக் குடித்து விடலாம் என்று பார்ப்பது போலாகும் நான் வால்மீகி ராமாயணத்தை எளிய முறையில் சரியாக எடுத்துச் சொல்ல முயல்வது. ஆயினும் கடலைத் தாண்டிய ஆஞ்சனேயன், யார் ராம கதையை எந்த விதமாகச் சொல்ல முயன்றாலும் உதவுவான்.

பக்தியுடன் ஒருவன் செய்யும் பணியில் பெரியோர்கள் குற்றம் பார்க்க மாட்டார்கள். உற்சாகப்படுத்தி, பணியைப் பயன்படும்படியே செய்வார்கள்.

பிராணிகளுக்கு எலும்பும் சதையும் இருப்பது போல் தாவரங்களுக்கும் உண்டு. சில தாவரங்களுக்கு நம்மைப் போல் உள்ளே எலும்பும் வெளியே சதையும் இருக்கும். வேறு சிலவற்றிற்கு உள்ளே சதையும் வெளியே எலும்பும் அமைந்திருக்கும்.

மா, பலா, புளி, தேக்கு முதலிய மரங்களின் சதை அவற்றின் பச்சைப் பட்டை. மரத்தின் உயிர்ச் சத்து பட்டையின் வாயிலாகவே செல்கிறது. மரத்தின் உள்ளே நின்று பாரத்தைத் தாங்கும் நடுமரமே அதனுடைய எலும்பாகும். ஆனால் மரத்துக்கு வேண்டிய உயிர்ச் சத்து மரத்தின் பச்சைப் பட்டையில் தான் பாய்ந்து வருகிறது.

எலும்பு உள்ளேயும் உயிர்ச் சத்து பச்சைப் பட்டையிலுமாக இந்த வகைத் தாவரங்களின் ஜீவனம் நடைபெறுகிறது. இதற்கு நேர்மாறாக இருப்பது வாழை, தென்னை, பனை, கமுகு, நெல், புல், சோளம், கரும்பு இவைகளின் அமைப்பு. வெளிப் புறத்தில் எலும்பு, உள்ளே தண்டில் உயிர்.

பனை, தென்னை, வாழை, கரும்பு இவ்வகைத் தாவரங்களைப் போல் பிராணி வர்க்கத்திலும் ஆமை, சங்கு, சிப்பி, கிளிஞ்சல் முதலிய பிராணி வகைகள், உள்ளே உயிரும் வெளியே ஓடுமாக இருக்கின்றன. கிளிஞ்சல், சங்கு முதலிய பொருள்களை நாம் அந்தப் பிராணிகள் செத்த பின்னரே உபயோகப்படுத்துகிறோம். ஆனால் நீரில் உயிருடன் வாழும்போது ஓட்டிற்குள் உயிரும் சதையும் இருக்கும். நம்முடைய எலும்பு உள்ளே இருப்பது போல் இவற்றின் வெளியோடு அவற்றின் எலும்பு. உயிரும் உணர்ச்சியும் சதையும் ஓட்டிற்குள் மூடிக் காக்கப்பட்டிருக்கும்.

இவ்வாறே நூல்களையும் இரு வகையாக வகுக்கலாம். ஒரு வகைக்குச்



சொல்லுக்குள் மூடிக் கிடக்கும் பொருளே உயிர். மற்றொரு வகைக்கு வடிவமே உயிர். விஷயங்களை விளக்கித் தரும் நூல்களான ரசாயனம், வைத்தியம், தேச சரித்திரம், பூகோளம், கணிதம் முதலியவை நூல்களின் பொருளில் உயிர் கொண்ட வகை. பாடல்களும் பெருங்காவியங்களும் பொருளுக்குக் கவிஞர் தந்த வடிவழகிலேயே தம் உயிரை வைத்து நிற்கின்றன.

செய்யுளைப் பிரித்து உரை நடையில் எழுதினால் அந்தப் பொழிப்புரையில் உயிர் இருக்காது. கவிஞர் கொடுத்த வடிவத்தைச் சேதித்து விட்டால் உயிர் மாண்டு போகிறது. ஒரு கணித நூல் அல்லது வைத்திய நூல் அவ்வாறு அல்ல. மனனம் செய்வதற்காக அதற்கு ஆசிரியர் செய்யுள் வடிவம் தந்திருந்தாலும் - பழைய நாட்டுக் கணித நூல்களும் வைத்திய நூல்களும் இவ்வாறே அமைக்கப்பட்டு வந்தன - அவற்றை விரித்து உரை நடையில் எழுதினாலும் அதன் உயிர் நீங்காது. பொருளிலே உயிர் கிடப்பதால் பொருளோடு உயிர் இணைந்து நிற்கும்.

கம்பன் பாட்டையோ அல்லது பாரதியார் பாட்டையோ உரை நடையில் எழுதினால் பொருளுக்குச் சேதமில்லை. ஆனால் உயிரில்லாத உடல்தான் நிற்கும். உயிரிழந்த பிராணியைப் போல் உரை நடையில் மாற்றி எழுதிய பாடல் கிடக்கும். அதனோடு பதவுரையும், 'விசேஷ' உரையும், இலக்கணக் குறிப்பும் எழுதி விட்டாலோ அது சவச்சோதனை ஆலயமாகத்தான் பயன்படும். பிரேத சோதனையில் அறிவு வளர்ச்சிக்கு மிக்க பயன் உண்டு. ஆனால் அழகில்லை; ஒளியில்லை; உயிரில்லை; பாடலின் தனிப் பயன் இல்லை..

யானை இருந்தாலும் ஆயிரம் வெள்ளி, இறந்தாலும் ஆயிரம் வெள்ளி என்பது போல் சில நூல்கள் இரு விதத்திலும் பயன் தரும். காவியங்களையும் பாடல்களையும் அன்னியருக்காக மொழிபெயர்ப்பது தற்கால வழக்கத்



தில் பதிந்து போயிருக்கிறது. தமிழருங் கூடக் கம்பனையும் பாரதியையும் திருக் குறளையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதில் ஈடுபடுகிறார்கள். சில தமிழர் அவ்விதம் மொழி பெயர்த் ததைப் படிப்பதிலும் ஈடுபடுகிறார்கள். வால்மீகியை நான் சொல்வதும் இந்தக் கணக்கே. ஆனால் மொழி பெயர்த்த ராமாயணத்துக்கும் இறந்து போன யானையைப் போல் கொஞ்சம் விலை யுண்டு என்பதைச் சொல்லி விளக்கு வதற்காகவே இந்த நீண்ட முன்னுரை.

**வா**ல்மீகி பகவான் ராமாயணம் பாடிய காலமும், ஸ்ரீ ராமச்சந்திரன் அவ தரித்து இம் மண்ணுலகில் வாழ்ந்த கால மும் ஒன்றே என்பது புராணம் வாசிப்ப வர்களுடைய பரம்பரைக் கொள்கை. உலக அனுபவத்தை வைத்து ஆராய்ந்து யோசித்தால், வால்மீகி ரிஷியானவர் ராமாயணம் பாடியதற்கு முன்ன மேயே, அதாவது புராதன காலந் தொட்டே, சீதாராம சரித்திரம் மக்க ளிடை எழுத்து வடிவம் பெறாமலே பல நூற்றாண்டுகள் வாய்வழிக் கதையாக வழங்கி வந்திருப்பதாகத் தோன்று கிறது. கர்ண பரம்பரையாக, முன்ன மேயே இருந்த ராம சரிதத்தை எடுத்துக் கொண்டு அதற்கு வால்மீகி பகவான் நூல் வடிவம் கொடுத்தாற்போல் தோன்றுகிறது. இதனாலேயே கதையில் பல சிக்கல்கள் ஏற்பட்டதென்றும் ஊகிக்கலாம். வாலியைக் கொன்ற முறை - அதில் நாம் காணும் நியாயக் குறை, சீதையைக் காட்டுக்கு அனுப்பிய அநீதி, இவை போன்ற இன்னும் பல சிக்கல்கள். வால்மீகி ரிஷியின் காவி யத்தில் இராமன் ஒரு மகா புருஷன். ஈசுவர அவதாரமாக வைத்து எழுத வில்லை.

சில அதிகாரங்களிலும், இங்கு மங்கும் சுலோகங்களிலும் தெய்வ அவ தார விஷயத்தைச் சொல்லி வந்தாலும், மொத்தத்தில் மேலே சொன்னபடி வால்மீகி ராமாயணத்தில் காணப்படும் ராமன் ஒரு சிறந்த ராஜகுமாரன், வீர புருஷன், அபூர்வமான தெய்வீக குணங் கள் பெற்றவன். அம்மட்டே; கடவுள் அல்ல.



"இந்தாடா, உன் பெண்சாதி சதா சர்வ காலமும் டி. வி.யைப் பார்த்துக் கொண்டே இருக்கா, கொஞ்சம் சொல்லி வை!"

"இப்பத்தானே புதுசா டி. வி. வாங்கி யிருக்கோம்... கொஞ்ச நாட்களுக்கு அப்படித் தான் இருக்கும். போகப் போகச் சரியாயி டும்மா!"

"என்னதான் புதுசா டி. வி. வாங்கியிருந் தாலும் நிகழ்ச்சிங்களே இல்லாதப்பக் கூடவா பார்க்கிறது?"

- ஞா. ஞானமுத்து



"மாமியாருக்கும் மருமகளுக்கும் லடாயாமே, உண்மையா?"

"தெரியாதவங்கதான் அப்படிச் சொல்லுவாங்க... அவுங்க திடீர் திடீ ரென்று கராத்தே பழகுவாங்க, அவ்வளவு தான்!"

- ஆர். கே. லிங்கேசன்

"தலைவர் சலூன் கடைக்குப் போகும்போது அவர் பின்னாடி பத்து தொண்டர்கள் போறாங் களே, ஏன்...?"

"சலூன் கடையில் முடி வெட்ட துண்டைப் போர்த்தும் போது கை தட்டுவதற்குத்தான்!"

- சி. எஸ். ராஜ்

வால்மீகி முனிவரின் காலத்தி லேயே ஸ்ரீராமனைப் பற்றி அவதாரக் கொள்கை ஓரளவு ஜனங்களின் மனத்தில் இருந்து வந்தது. வால்மீகி ராமாயணம் இயற்றிப் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு கம்பரும் துளசி தாஸரும் ராமாயணம் பாடினார்கள். இதற்குள் மகாவிஷ்ணுவின் அவதாரமே ஸ்ரீராமன் என்பது நாட்டிலே நன்றாக ஊர்ஜிதப்பட்டுப் போன கொள்கையாகி விட்டது. ராமன் என்றாலும் கிருஷ்ணன் என்றாலும் மகாவிஷ்ணுவே; மகாவிஷ்ணு என்றால் ராமனே, கிருஷ்ணனே - இந்த நிலைக்கு ஜனங் களின் கொள்கை வந்துவிட்டது. இதற்கு ஏற்ப பக்தியும் கோயில்களும் வழிபாடும் ஏற்பட்டு ஸ்திரமாகி விட்டன.

மக்களுடைய நம்பிக்கையும் வழிபாடும் இவ்வாறு பரிணமித்து விட்ட பிறகு, கம்பரோ துளசிதாஸரோ மீண்டும் ராமனை எப்படி வெறும் வீரனாக வைத்துப் பாட இயலும்? அப்படிப் பாட முயன்றாலும் அது வீணாகும். கம்பரும் துளசிதாஸரும் பரிபூரண பக்தர்கள்; ஆழ்வார்களே யாவார்கள். தற்கால சரித்திர ஆராய்ச்சியாளர் அல்லது நெடுங் கதை எழுத்தாளர்களைப் போன்றவர்கள் அல்ல! ராமாவதாரத்தை வால்மீகியைப் போல் வெறும் ஒரு வீர புருஷனைப் பற்றிய கதையாக எழுத முடியாத நிலையிலும் காலத்திலும் கம்பர் பாடினார். ராமனை மானிடப் பிறவியில் அடைக்கக் கம்பருடைய பக்தி இடம் தராது. ஆனபடியால் கம்ப ராமாயணத்தில் அடிக்கடி, மிக ரசமான இடங்களில் ராமன் மகா விஷ்ணுவே, கடவுளே, அனைத்திலும் பரவி நிற்கும் பரம் பொருளே என்று வைத்து மனத்தை உருக்கும் முறையில் அற்புத அழகோடு பாடியிருக்கிறார்.

காலத்துக்கும் சூழ் நிலைக்கும் தக்கவாறு உண்மைக் கவிஞர்கள் பாட முடியுமேயொழிய வெறும் வறட்டு ஆராய்ச்சிகளைப் பாட்டாகப் பாட மாட்டார்கள்.

வால்மீகி ராமாயணத்துக்கும் கம்ப ராமாயணத்துக்கும் மற்றொரு பெரும் வித்தியாசம். வால்மீகி பகவான் பாடிய நூல் தமிழ் அகவற்பா முறையில் அமையப்பட்டது என்று சொல்லலாம். கம்பர் பாடியது நிருத்தியத்துக்குத் தகுந்த பாட்டு. ஆங்கிலத்தில் சொல்வோமானால், வால்மீகி ராமாயணம் கம்பீர நாதம் பொருந்திய Blank Verse என்றும் கம்பராமாயணம் ஒரு Lyric என்றும் கூறவேண்டும். கம்பருடைய பாட்டுக்கள் ஒவ்வொன்றும் எதுகையும் மோனையும் சந்தமும் கலந்து, பளிச்சுப் பளிச்சென்று ஆபரணங்களைப் பூண்ட மங்கையின் ஆடலைப் போல் மின்னித் துள்ளி நடனமாடுகிறது. தெய்வீக அவதார விஷயத்தை வைத்து உண்டாகும் உணர்ச்சியுடன் நடனக் கலையும் கலந்து கம்பருடைய ராமாயணம் பேரழகு அடைந்து விளங்குகிறது. ஆனால் அதைத் தமிழ் மக்கள் மட்டுமே அனுபவிக்க முடியும். அதன் அழகு மற்றவர்களுக்குச் சரியாக விளங்காது. கம்ப ராமாயணத்தை அன்னிய மொழியில் பெயர்த்து எழுதுவதிலாவது தமிழில் செய்யுள் உருவத்திலிருந்து வசன மாக்குவதிலாவது பெரும் பயன் ஒன்றுமில்லை. வசனமாக எடுத்துச் சொல்லி விளக்கி விட்டு, உடனே சரியான முறையில் பாடினால் நல்ல பயன் ஏற்படும். ★டி.கே.சி. மறைந்த பின் இதைச் சொல்லித்தான் என்ன பயன்?

(தொடரும்)

★ தமிழ்க் கவிதை - குறிப்பாகக் கம்பராமாயணம் - யின் நயத்தை உலகறிய உணர்த்திய பெரியவர் டி.கே.சி. அமரர் கல்கியால் ரசிகமணி எனப் பெயர் சூட்டப் பெற்றவர்.




# கல்கி





1992
அக்டோபர் 25
மலர் : 51
இதழ் : 13
ஆங்கீரச
ஐப்பசி 9


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## மனித அரக்கர்கள்!

பீகாரின் சீதாமார்ஹி பகுதியில் நடந்துள்ள அக்கிரமங்களைக் கண்கொண்டு படிக்கவே முடியவில்லை என்றால் அவற்றை அனுபவித்துள்ள மக்களின் துன்பம் எத்தகையதாக இருக்கும்! பெண்களை மானபங்கம் செய்தும் மார்பகங்களை அறுத்தும்; கற்பழித்தும் கண்களைக் குடைந்தெடுத்தும்... இன்னும் ஏதேதோ எழுதவே கூசும் அக்கிரமங்கள். இவர்கள் மனிதர்கள்தானா, மனித உருவில் வந்த அரக்கர்களா என்று சந்தேகிக்க வைக்கும் கொடுமைகள்.

பொதுவாக மக்கள் அமைதியாகவே வாழ விரும்புகிறார்கள் என்பதும் இதுபோன்ற கொடூர மதக் கலவரங்கள் நடக்கக் காரணம், 1. ஆட்சியில் உள்ளோரின் முன்யோசனை இன்மையும், 2. மதவெறியர்கள் அரசியலில் புகுந்து ஒவ்வொரு கலவரத்தையும் தூண்டி விட்டு அதில் அரசியல் ஆதாயம் தேடப் பார்ப்பதும்தான் என்பது மீண்டும் ஒரு முறை நிரூபணம் ஆகியுள்ளது.

துர்க்கா பூஜை நடந்த பிறகு அந்தச் சிலையை நதிநீரில் கரைக்க ஊர்வலமாக எடுத்துப் போனார்களாம். வழக்கமான படித் துறையில் ஆழம் காணாது என்பதால் வேறு வழியில் வேறு ஒரு படித்துறைக்குப் போகத் தீர்மானித்தார்களாம். இதனைச் சிறுபான்மைச் சமூகம் எதிர்த்தது என்றும், ஏற்றுக் கொண்டது என்றும் இருவிதமாகவும் பேசப்படுகிறது. எவ்வாறாயினும் பாதை மாற்றம் கல்லெறிதலுக்கு இடமளித்து, பயங்கரமான மதக் கலவரத்தில் முடிந்திருக்கிறது. சிறுபான்மைச் சமூகம் – குறிப்பாகப் பெண்கள் – சொல்லி முடியாத துன்பங்களுக்கு உள்ளாகியிருக்கிறது.

பீகார் அரசு, 'இந்தக் கலவரத்தில் ஈடுபட்டவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்று வீராவேசத்துடன் பேசுகிறது. முதல்வர் லல்லு பிரசாத் யாதவ், திடீர் டெலிஃபோன் சோதனைகள் செய்து, 'அலட்சியமாக இருந்த அதிகாரிகளை வீட்டுக்கு அனுப்பினேன்' என்று மார்தட்டுகிறார். இந்த சாமர்த்தியம் எல்லாம் ஊர்வலம் நடக்கப் போகிறது; அதுவும் பாதை மாறப் போகிறது என்ற உடனேயே செயல்பட்டிருந்தால் ஒருவேளை இந்தக் கலவரமே நிகழாமல் தடுக்கப்பட்டிருக்கக் கூடும்.

அரசுதான் முன்யோசனையுடன் நடந்து கொள்ளவில்லை என்றால் அரசியல் தலைவர்களாவது நாட்டுக்கு நல்லதை எண்ணி, கலவரம் ஏதுமின்றி ஊர்வலம் நடந்து முடிய வழிவகுக்கலாம். ஆனால் மத வெறிகளைத் தூண்டி, கலவரங்களை உருவாக்கி, அதன் மூலம் ஆள்பவருக்கும் ஆளும் கட்சிக்கும் அவப்பெயரை உண்டாக்கலாம் என்றே திட்டமிட்டு எதிர்க்கட்சியினர் செயல்படுகிறார்கள். போதாக்குறைக்கு மத்தியில் ஆளும் கட்சி வேறு, மாநிலத்தில் ஆளும் கட்சி வேறு என்பதால், பார்வையாளராக வரும் மத்திய அமைச்சர் அவிழ்த்து விடும் புகார் மூட்டைகள் வேறு! 'எரிகிற வீட்டில் பிடுங்கிய வரை ஆதாயம்' என்ற இந்த அரசியல் போக்கு காரணமாக, யாருமே 'நாட்டின் எதிர்காலம் என்ன ஆவது?' என்று சிந்திப்பதில்லை. மக்களின் மனங்கள் படிப்படியாக விஷமயமாகி வருவதை யோசிப்பதில்லை.

இதற்கிடையில் மத்திய அரசு, தான் ஏதோ பிரமாத சாதனை பண்ணி விட்டதாகக் கருதி, மதக் கலவரங்களை அடக்குவதற்கென்றே "புயல் வேகச் செயல் படை" ஒன்றை உருவாக்கியுள்ளது. எங்கு கலவரமென்றாலும் இப்படை பறந்து செல்லுமாம்!

கலவரங்களை அடக்குவதை விட, நடக்காமல் கவனித்துக் கொள்வதுதான் புத்திசாலித்தனம் என்பதை மத்திய – மாநில அரசுகள் உணருமானால் பின்வரும் காரியங்களைச் செய்யும் : 1. மதத் தொடர்பான ஊர்வலங்களுக்கு அனுமதி வழங்கும் போதே வருமுன் காக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளும். 2. சர்வகட்சிகளின் சம்மதம் பெற்று, போலீஸாரால் நிர்வகிக்கக் கூடிய அளவில் ஊர்வலத்தில் பங்கேற்கும் மக்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தும். ஊர்வலம் என்பது ஓர் அடையாளம்தானே தவிர பலப்பரீட்சை அல்ல என்பதை அனைவரும் உணரச் செய்யும். 3. சுதந்திரம் பெற்று 45 ஆண்டுகள் ஆகியும் மத ஒற்றுமையைப் பலப்படுத்தாத இந்தக் கல்வி முறை பயனற்றது என்பதைப் புரிந்து கொண்டு, புதிய, சிறந்த பாடத் திட்டத்தை வகுக்கும். 4. சர்வகட்சி மாநாடு நடத்தி, மதச் சார்புள்ள கட்சிகளும் பொதுவாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட புதிய கொள்கைகளை வகுத்துக் கொள்ள உதவி புரியும். 5. கலவரம் நடந்த பிறகு புயல் வேகச் செயல் படையை அனுப்புவதற்குப் பதில், கலவரம் நடக்கக் கூடிய இடங்களில் அமைதிப் படைகள் உருவாக்கி அவற்றுக்குச் செயல் திட்டம் வகுக்கும்.

கால்நடை மருத்துவராகத் தமது தொழில்முறை வாழ்க்கையை ஆரம்பித்து இருபது ஆண்டுகளில், கால்நடை மருத்துவப் பல்கலைக் கழகத்துக்கே துணைவேந்தராகி விட்ட பெருமைக்குரியவர் டாக்டர். வெ. ஞானப்பிரகாசம். அவர் கால்நடைகளுக்கு மருத்துவம் பார்த்த போது தான் எத்தனை எத்தனை அனுபவங்கள்! அவற்றுள் சிலவற்றை நம்முடன் பகிர்ந்து கொள்ளுகிறார் :



# நொண்டிய மாடு நடந்தது!

# யானையின் அவஸ்தை தீர்ந்தது!

ஓர் இரவு மாயவரம் ரயில்வே ஸ்டேஷனில் போய் இறங்கினேன். கடும் மழை. எப்படி இருப்பிடம் போய்ச் சேர்வது? ஸ்டேஷனுக்கு வெளியே ஒரே ஒரு மாட்டு வண்டி, யாரையோ ஏற்றிக் கொண்டு புறப்படத் தயாராக இருந்தது. என்னைப் பார்த்த வண்டிக்காரர், வண்டியில் உட்கார்ந்திருந்தவரை இறக்கி விட்டு விட்டு, என்னை வண்டியில் ஏறிக் கொள்ளச் சொன்னார். நான் தடுத்தும் கேட்கவில்லை. ஜாகையில் வண்டியை விட்டு இறங்கி, ''வண்டிச் சத்தம் எவ்வளவு?'' என்று கேட்க, ''உங்ககிட்ட நான் பணம் வாங்கலாமுங்களா?'' என்றார். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

''நீ யாரப்பா? என்ன சொல்கிறாய்?''

அந்த வண்டிக்காரர் சொன்ன பிளாஷ் பேக் இது :

சில வருடங்களுக்கு முன் நான் மாயவரத்தில் கால்நடை மருத்துவராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். ஓர் இரவு, ஏழெட்டு மணியளவில் ஒருவர், ''ஐயா! என் மாடு, லாரியில் அடிபட்டுக் கிடக்குதுங்க. உடனே வந்து காப்பாத்துங்க. என் பொழைப்பே அந்த மாட்டை நம்பித்தாங்க இருக்குது'' என்று அழுது கொண்டே வந்தார். நானும், உதவியாளரை அழைத்துக் கொண்டு புறப்பட்டேன். மாடு இருந்த நிலை பரிதாபம். பலமான காயங்களுடன், ரத்தம் கொட்டி, குளம்புகள் அடிபட்டு... உடனடியாய்க் கட்டுப் போட்டு, மருந்து கொடுத்து, கவனமாய்ப் பார்த்துக் கொள்ளும்படி எச்சரித்து விட்டுப் புறப்பட்டேன். மாட்டுக்குச் சொந்தக்காரரின் பரிதாப நிலைமையைப் பார்த்தபின், ஃபீஸ் பற்றி ஒன்றும் பேசவில்லை.

ஆனால் அவரும் எங்கள் பின்னாலேயே வீட்டை விட்டுப் புறப்பட்டார். அவர், எதையோ இடுப்பு வேட்டியினுள்





வைத்து முடிந்து கொள்வதைக் கவனித் தேன். எனக்கு இதில் ஏதோ விஷயமிருப்பது புரிந்து விட்டது. ''என்னய்யா இடுப்புல?'' என்றேன். ''அது ஒன்னுமில்லீங்க'' என் றார். ''டாக்டர்கிட்டே பொய் சொல்லறது தப்பு. இடுப்புல என்ன சொல்'' என்றேன். இடுப்புத் துணியைப் பிரித்து, உள்ளே இருந் ததைக் கையில் எடுத்தார். தமது மனை வியின் தாலி. அடகுவைத்து எனக்கு ஃபீஸ் கொடுப்பதற்காக! ஒருகணம் ஸ்தம்பித்துப் போன நான், கண்டிப்பான குரலில், ''தாலியை வீட்ல திருப்பிக் குடு. நீ ஃபீஸ் குடுத்தாலும் நான் வாங்கிக்க மாட்டேன்'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

அந்த வண்டிக்காரர்தான் இப்போது நான் சந்தித்தவர். அவரை எனக்கு அடை யாளம் தெரியாது போனாலும், என்னை அவர் மறக்கவில்லை.

விஜயன் என்றொரு நண்பர். அவ ருக்கு என் வீட்டு அல்சேஷன் நாய் போட்ட குட்டியொன்றைக் கொடுத்தேன் வளர்ப்ப தற்கு. இது நடந்தது '76ல். பத்தாண்டுகள் அன்புடன் அவர்களால் வளர்க்கப்பட்ட 'புருனோ' என்ற அந்த நாய் திடீரென்று ஒருநாள் செத்துப் போய் விட்டது. தம் செல்லப் பிராணியான 'புருனோ'வை இழந்த சோகத்திலிருந்து நண்பர் விஜயன் குடும்பத்தினர் மீளப் பல நாட்கள் ஆயிற்று. புருனோ நினைவாக, சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரியில் ஒரு டிரஸ்ட்டை நிறுவி, கிளினிகல் மருத்துவப் பிரிவில் முதல் இடம்பெறும் மாணவருக்குப் பரிசு அளிக்க ஏற்பாடு செய்திருக்கிறார் விஜயன்!

இன்னொரு பிஸினஸ் மேன். அவ ருக்குத் தமது பிஸினஸைக் கவனிக்க, தினத் துக்கு நாற்பத்தெட்டு மணி நேரம் இருந்தா லும் பத்தாது. அவருடைய மனைவிக்கோ ஷாப்பிங், லேடீஸ் கிளப் என்று செல்வ தற்கே நாள் முழுக்க சரியாக இருக்கும். அவர்களுடைய பத்து வயது மகன் சுரேஷ் (பெயர் மாற்றப்பட்டுள்ளது), தனிமையாய் உணர்ந்தான். அதுவே அவன் மனநிலை யைப் பாதித்தது. இதை என்னிடம் பேசிக் கொண்டிருந்த போது குறிப்பிட்டார் ஒரு பொது நண்பர். அந்தப் பையன், வீட்டில் வளர்க்க ஒரு நாய் வாங்கிக் கொடுக்கும்படி நான் ஆலோசனை கூற, அடுத்த நாளே அவர்கள் வீட்டில் ஒரு நல்ல ஜாதி நாய் ஆஜர்.

சுரேஷும், அவனுடைய நாயும் ரொம்ப நெருக்கமாகி விட்டார்கள். சுரேஷ் நார்மல் ஆனான். ஏழெட்டு ஆண்டுகள் எந்த விதமான பிரச்னையுமின்றி ஓடின. நான் சுரேஷின் தந்தையிடம், அவனுக்கு இன் னொரு நாயும் வாங்கிக் கொடுத்து விடுங்கள் என்றேன். காரணம், ஏற்கெனவே மனநிலை பாதிக்கப்பட்டு குணமடைந்த அந்தச் சிறுவன், ஆசையுடன் வளர்க்கும் நாய் இறந்தால், அந்தச் சோகம் முன்னிலும் அதிகமான பாதிப்பை அவனிடத்தில் ஏற்படுத்த வாய்ப்புண்டு என்பதுதான். என் ஆலோசனைப்படியே இரண்டாவது நாயும் வந்து சேர்ந்தது. அடுத்த ஒரு வருடத்துக்குள் முதல் நாய், முதுமை காரணமாய் இறக்க, இரண்டாவது நாய், அவனைக் காப்பாற்றி யது.

சேலம் மாரியம்மன் கோவில் யானைக்கு மலச்சிக்கல். ஆரம்பத்தி லிருந்தே சரிவர கவனிக்காமல் விட்டு விட்டதால், நிலைமை தீவிரமாகி விட்டது. யானை தன்னுடைய அசாத்திய அவஸ்தை காரணமாய், ஒருவரையும் கிட்டே நெருங்க விடவில்லை.

ஒரு குடத்தில் தண்ணீரும், இன்னொரு குடத்தில் பாரபின் மெழுகு குழம்பும் தயார் செய்தேன். (யானையின் மலச்சிக்கலுக்கு பாரபின் மெழுகுதான் மருந்து) இரண்டிலும் ஏலக்காய்களைப் போட்டேன்.

யானைப்பாகனின் மனைவி உதவி னாள். முதலில் ஏலக்காய் மணமுள்ள தண் ணீர்க் குடத்தை யானையின் துதிக்கைக்கு எட்டும் இடத்தில் வைக்கச் செய்தேன். யானை அதைக் குடிக்க வரும் போது, குடத்தை எடுத்து விடச் செய்தேன். இதே போல நாலைந்து தடவைகள் செய்தபின் கடைசியில் தண்ணீர் குடத்துக்குப் பதிலாக, பாரபின் மெழுகு உள்ள குடத்தை வைத்து விட்டு, அந்த இடத்தை விட்டு அகன்று விட் டோம். தண்ணீர் என்று நினைத்து, ஏலக்காய் மணத்துடன் இருந்த பாரபின் மெழுகைக் குடித்து விட்டது யானை! இறுதியில் தான்

## நினைவில் நிற்கும் நூறு பேர்!

பல்வேறு துறைகளிலும் சாதனைகள் புரிந்து நினைவில் நிற்கின்ற நூறு பேரைத் தேர்ந்தெடுக்க வாசகர்களை அழைக்கிறோம்.

◆ நீங்கள் தேர்ந்தெடுப்பவர் இந்தியராக இருக்க வேண்டும்.

◆ 1992 ஆம் ஆண்டில் புரிந்த சாதனைக்காக என்றென்றும் நினைவில் கொள்ளத் தக்கவராக இருக்க வேண்டும்.

◆ ஒரே ஒரு நபரின் பெயரை மட்டுமே கீழேயுள்ள கூப்பனில் எழுதி, உங்கள் பெயர், விலாசத்துடன் அனுப்பி வையுங்கள்.

◆ அதிக வாசகர்களால் தேர்ந்தெடுக்கப்படும் நூறு பேர்களின் பெயர்ப் பட்டியலும் சிறு குறிப்புக்களும் இவ்வாண்டு இறுதியில் வெளிவரும் கல்கி இதழில் இடம்பெறும்.

◆ உங்கள் கைப்பட நிறைவு செய்த இக் கூப்பன் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 30.10.92.

◆ உறை மீது 'நினைவில் நிற்பவர்' எனத் தவறாமல் குறிப்பிடவும்.

என் நினைவில் நிற்பவர் :

.......................................................

காரணம் : ..............................................

.......................................................

.......................................................

என் பெயர் : ..........................................

விலாசம் : ............................................

.......................................................

.......................................................

.......................................................

.......................................................

குடித்தது தண்ணீர் அல்ல; வேறு ஏதோ என்று அது உணர்ந்த போது ஒரு ஆர்ப்பாட்டம் பண்ணியது பாருங்கள்...! கட்டிப் போட்டிருந்ததால் ஆபத்தொன்றுமில்லை. பாரபின் மெழுகு உள்ளே போய், தன் பணியைச் செய்ய, யானையின் சிக்கல் தீர்ந்தது.

சென்னையில் ஒரு பெரும் பணக்காரர் வீட்டுச் சீமைப் பசுவுக்குப் பின்னங் கால்களை ஊன்றி எழுந்திருக்க முடியவில்லை. முன்னங்கால்களை ஊன்றிக் கொண்டு, பின்னங்கால்களை மடக்கியபடி தவளையைப் போலத்தான் நகர முடியும். அந்தப் பணக்காரரும் ஏழெட்டு மாத காலமாய் என்னென்ன சிகிச்சை உண்டோ அத்தனையையும் செய்து பார்த்து விட்டார்; பிரயோஜனமில்லை. என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு, அழைத்தார். போய்ப் பார்த்தேன். மாட்டை வைத்திருந்த கொட்டகையையும் அதன் அமைப்பையும் கவனித்தேன்.

''ஒரே ஒரு காரியம் செய்யுங்கள். இந்தக் கொட்டகையில் போடப்பட்டுள்ள சிமெண்ட் தளத்தைப் பெயர்த்து எடுத்து விட்டு, சுமார் நான்கடி ஆழம் நல்ல மணலைப் பரப்பி விடுங்கள்!'' என்று கூறினேன். அவர் 'சரி! அப்படியே செய்து விடலாம். ஆனால் மாட்டுக்கு என்ன வியாதி என்று சொல்லவில்லையே? அதற்கு என்ன மருந்து?' என்று கேட்டார். ''நான் மணலைப் போடச் சொன்னதுதான் மருந்து!'' என்று கூறி விளக்கமும் கொடுத்தேன் :

''இதுபோன்ற உயர்வகைப் பசுக்களைத் திறந்த வெளிப் பண்ணைகளில் சுதந் திரமாய்த் திரிய விட வேண்டும். அவற்றின் கால்களும், குளம்புகளும் இணையுமிடம் மிகவும் மிருதுவானது. எனவே மணல் பரப்பில் நடப்பதுதான் அவற்றுக்குச் சௌகரியம். சிமெண்ட் தளத்தில் நடக்க, நடக்க குளம்பு, காலுடன் சேரும் பகுதியில் குத்தல் ஏற்பட்டு, நாளடைவில் அது மரண அவஸ்தையை அளிக்கும். எனவேதான் மாடு தவளை போல் நகர்கிறது!''

சில நாட்கள் கழித்து எனக்கு டெலிபோன். பேசியவர் அந்தப் பணக்காரர். ''எழுந்து கூட நிற்க முடியாமல் அவஸ்தைப்பட்ட மாடு, இப்போது தரைப் பரப்பை மாற்றிய பிறகு, வேலையாட்களுக்குப் பாய்ச்சல் காட்டுமளவுக்கு ஆகி விட்டது'' என்று கூறி நன்றி செலுத்தினார்.

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி

# பாப்கார்ன் கனவுகள்

## 1

**ம.வே.சிவகுமார்**

**கா**ர் ஹாரன் அடித்து நிற்கிறது.

ஆறு மணிக்கே அனைவரும் கிளம்பி மாப்பிள்ளை அழைக்க கோவிலுக்குப் போய் விட்டார்கள். வெளியே பந்தலில் யாருமில்லை. வாசல் வாழை மரத்தில் தெரு மாடு பட்டை உரிக்கிறது. சீரியல் பல்ப் கொத்து விளக்கு அணைந்து எரிகிறது. வரிசையாய் மடக்கு நாற்காலிகளின் அணி வகுப்பு. தரையில் இழைத்த அரிசி மாவில் நல்வரவு. மேலே கவிழ்ந்த கோலாப்பூரி யின் ஜரிகை கட்டிய சிவப்பு குஞ்சலம். உள்ளே ஆணியில் சரத்துண்டு சுற்றிய மறு நாள் மாலைகள். மண்டபத்தில் பெண் வீட்டினர் இறங்கியிருக்கிற பகுதி. கண் ணாடி முன் கலக்கிற உச்சந்தலை பில்லை உள்விட்ட தாழம்பூ அலங்காரங்களுடன் பூரித்த கன்னத்தில் கொஞ்சம் போல் நாணம் பூசி மணமகள் விஜயலக்ஷ்மி ஒப்பனை உடைந்து விடாமல் மெல்லச் சிரித்து அமர்ந் திருக்கிறாள். வேகபாசாய் நழுவுகிற தாவணிகளில் தோழிகள் சூழ்ந்து கொண்டு அவள் அழகுக்கு அழகூட்டி, காதருகில் கிசு கிசுத்து, கண்ட இடத்தில் கிள்ளி விட்டு எழுந்த பச்சைக் கெக்கலியின் ஊடே, அறைக்குள் பரபரப்பாய் மேலும் ஒரு பெண் நுழைந்து, நழுவிய மூக்குக் கண்ணாடியில் மூச்சிரைக்கக் கத்துகிறாள். வெளியே கார் வந்தாகி விட்டது. சித்தி மாமா சீக்கிரம் புறப்படச் சொல்லுகிறார்.

அவ்வளவு அவசரத்திலும் கண்ணாடி முன் அலங்காரங்களைச் சந்தேகத்துக்கு மீண்டும் ஒரு முறை சரிபார்த்து மணமகள் விஜயலக்ஷ்மி, தோழியர் படை சூழ ஓட்ட மும், நடையுமாய் வெளியே காருக்கு வரு கிறாள். கார் புறப்படுகிறது.

போக்குவரத்து நிறைந்த தெருவில் மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் வரு கிறது.

பல்லவ ஃக்குத் தப்பிய கான்ஸ்டபிள், வாயில் ஊதல் வைத்து சைக்கிளைத் தவிர்க்கப் பின்னால் குதிக்கிறார். அருகில் ஸ்கூட்டர் கீச்சிட்டு நிற்கிறது. கீழே விழுந்த ஊதல் மேல் அம்பாஸிடர் கார் ஏறிப் போகிறது.

வெல்வெட்டு வேலைப்பாடுகளுடன் பேண்டு வாத்தியம். வேட்டியும், அங்க வஸ்திரமும் அணிந்து காதில் நாதஸ்வரம் வாங்கி மெல்லத் தொடர்கிற பெரியவர்கள். பழைய ஹெரால்டு காரில் பலகையடித்து நடமாடும் இன்னிசைக் குழு. நகர்கிற ட்யூப்லைட் வெளிச்சத்தில் நடனமாடுகிற இளைஞர்கள். சூழ்நிலையின் மகிழ்ச்சி கருதி உடன் ஆட இறங்கி விட்ட யுவதிகள். சேர்ந்து கொள்ள அழைப்பு கிடைத்ததில் முகம் சிவந்து பின்நகர்கிற கடுகடுத்த பெரி யவர். ஒரு தைரியத்தில் இறங்கி விட்டு நடனத்தின் நடுவே மலங்க நின்று, ஒலிக்கிற பாடல் வரிகளில் வேகம் கூடி, வேட்டியை வரிந்து கட்டி அனைவரின் உற்சாகக் குரல் களும் சேர்ந்து கொள்ள பெரியவர் ஒருவர் ஆடுகிறார். பேண்டு வாத்தியம் ஒலிக்கிறது.

பிளாஸ்டிக் பூ அலங்காரங்கள் செய்த கேஸ் லைட்டுகள் நகர்கின்றன.

கடக்கிற பல்லவன் பஸ் பயணிகள் எழுந்து நின்று பார்க்கிறார்கள்.

காரில் மாப்பிள்ளை லக்ஷ்மிநாரா யணன் பல வயதுக் குழந்தைகள் நடுவே முகம் முழுக்கச் சிரித்தபடி பதிலுக்குக் கையசைத்து நகர்கிறான்.

**ம**ணமகள் விஜயலக்ஷ்மியை ஏற்றி வருகிற கார், போக்குவரத்தில் விலகி வரு கிற ஊர்வலத்தில் மணமகனின் காரை யொட்டி எதிர்ப்பக்கமாக வந்து நிற்கிறது. வெட்கத்தில் தலைகுனிந்து விஜயலக்ஷ்மி உட்கார்ந்திருக்கிறாள். தோழிகள் தைரியம்



கொடுத்து அவளை நிமிர்ந்து பார்க்கும்படி அவசரப்படுத்துகிறார்கள். அந்த ஒரு கணத்தில்தான் உள்ளுக்குள் அவளுக்கு எத்தனை படபடப்பு? ஆர்வத்தில் உயர்ந்த நினைத்து, அச்சத்தில் வேகம் மட்டுப்பட்டவளாய் விழிகள் மருண்டு மெல்லத் தலைநிமிர்த்தி மணமகள் விஜயலக்ஷ்மி பார்வையில் ஆசை கலந்து பணிவுடன் செலுத்துகிறாள்.

எதிரே காரில் மாப்பிள்ளை லக்ஷ்மி நாராயணனைக் காணவில்லை.

கம்பத்தில் தொங்குகிற கயிற்றருகே கையில் மாலை கழட்டி வைத்து, பற்ற வைத்த சிகரெட்டுடன் கோட், சூட் அணிந்த மாப்பிள்ளை லக்ஷ்மிநாராயணன் நண்பர்கள் பின்தொடர சற்றுத் தள்ளி ஒரு காம்பவுண்ட் சுவரில் சினிமா போஸ்டர் திருப்பி வைத்துப் பின்பக்கம் பசை தடவிக் கொண்டிருக்கிற தொழிலாளியிடம் அது என்ன படம்? என்று கேட்கிறான். வாயில் வெற்றிலையுடன், இருக்கச் சொல்லி அபிநயித்து, தொழிலாளி மேலே தன் வேலையைத் தொடர, நண்பர்கள் இருவர் ஓடி வந்து மணமகள் விஜயலக்ஷ்மியின் கார் வந்து காத்திருப்பதைப் பதற்றமாய் உரக்கச் சொல்லுகிறார்கள்.

ம ா ப் பி ள் ளை அழைப்புக் காருக்கு அவசரமாய் ஓடி வந்து உட்கார்ந்து லக்ஷ்மிநாராயணன் அசடுவழியச் சிரிக்கிறான். அவ்வமயம் அவன் வாயில் தப்பிய சி க ரெ ட் புகைக்கு ஓரிரு பெரிய தலைகள் முகம் கருங்கிக் கொள்கின்றன. எதிரே காரில் மணமகள் விஜயலக்ஷ்மி முகத்தில் சிரிப்பு மாறாமல் பார்த்திருக்கிறாள்.

**ம**ண் ட ப த் தி ல் மாடிப் படிக்கட்டு. நண்பர்களுடன் பு தி ய வேட்டியில் மதியம் கட்டிய மஞ்சள் கயிற்றுடன் லக்ஷ்மிநாராயணன் படியிறங்க, பாதி வழியில் அவன் தாயார் எ தி ர் ப ப டு கி றா ள். லக்ஷ்மிநாராயணன் எங்கே கிளம்பி விட்டான்? ஏற்கெனவே அவளுக்குக் கவலையாய் இருக்கிறது. கையில் கங்கணம் கட்டியபின் அனாவசியமாய் அவன் வெளியே எங்கேயும் போகக் கூடாது.

''கங்கணமா? அது எங்கணம்? என்று கேட்டு லக்ஷ்மிநாராயணன் விரதக் கயிற்றுக்கு விளக்கம் பெற்று அவன் தாயார் தடுத்துச் சொல்லச் சொல்ல அலட்சிய நடை போட்டு நண்பர்களுடன் இரவுக் காட்சி திரைப்படம் பார்க்கப் புறப்பட்டுப் போகிறான்.

மண்டபத்தை ஒட்டிய பெட்டிக்கடை. பன்னீர் சோடா, கடலை உருண்டை, பீட்டுக் கட்டு, அவரவர் கேட்கிற சிகரெட்டுகள்.

''மொத்தம் எவ்வளவு ஆச்சு?''

லக்ஷ்மிநாராயணன் கேட்கிறான்.

''எழுபத்தி ரெண்டு ரூபாய், எண்பது காசு.''

லக்ஷ்மி நாராயணன் மண்டபத்தைக் காட்டுகிறான். அங்கே அவனுக்கு மறுநாள் கல்யாணம். மொத்தத் தொகையை ஒரு சிகரெட் அட்டையில் எழுதி வைத்தால்



ஸ்வீடனில் அமைச்சர்களுக்குத் தனி பங்களாவோ, காரோ வேறு எந்த விசேஷ சலுகைகளோ கிடையாது. அலுவலகத்துக்கு வர நகர பஸ்ஸில் இலவச சீசன் டிக்கெட்டு மட்டுமே தரப்படுகிறது.

''தி வீக்''

-அ. ஷண்முக சுந்தரம்

நாளை மொய்ப் பணம் வந்ததும் அவன் தந்து விடுவான்.

பேசிக் கொண்டே வந்து, நிற்கிற பஸ்ஸில் நண்பர்களுடன் ஓடிப் போய் லக்ஷ்மிநாராயணன் அமர்ந்து கொள்கிறான். பெட்டிக் கடைக்காரர் பஸ் போன திசையைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்.

நள்ளிரவில் மரங்கள் வாடிகட்டிய தெரு விளக்கின் வெளிச்சத்தில் தார் ரோட்டில் மழை பெய்திருப்பது தெரிகிறது. பெல் கப்பில் சப்தமெழுப்பி ரிக்ஷா ஒன்று வருகிறது. அது நெருங்கும் வரை படுத்திருந்து சட்டென்று எழுந்து விலகி, தெரு நாய் உடல் சடசடக்கிறது.

திருமண மண்டபத்தின் பூட்டிய இரும்புக் கதவு. வெளியே இருளில் ரிக்ஷா வந்து நிற்கிறது. கையில் கரண்டிகளும், ஜவுளிக் கடை துணிப்பையும் வைத்து, மடித்த அழுக்கு வேட்டியில் சமையல்காரர் இறங்குகிறார்.

''கேசவா...''

சமையல்காரர் நரம்பு புடைக்கக் கூப்பிடுகிறார். இரும்புக் கதவு மூடியிருக்கிறது. யாரையும் காணவில்லை.

''டேய், கேசவா!''

கதவு குலுங்குகிறது. வியர்க்க ஓடி வந்தவன் கேசவனாக இருக்க வேண்டும். அவசரத்தில் கைகள் நடுங்க பூட்டு திறக்கிறான்.

''மணி நாலு இருக்குமா?''

''உம்''

''ரமணி எழுந்தாச்சா?''

''ஆச்சு.''

''விடிஞ்சாப்ல முகூர்த்தம். பல் தேய்ச்சா நேரே டிபனுக்கு வந்துடுவா. உள்ளே என்ன நிலைமைன்னே தெரியல்லியே'' என்று முனகிக் கொண்டே சமையல்காரர் உள்ளே போக, இருட்டில் பிரகாசிக்கும் விளக்குகளுடன் டெம்போ ஒன்று பால் கேன்கள் சப்தமிட வந்து நிற்கிறது.

மண்டபத்தின் ட்யூப் லைட்டுகள் போடப்படுகின்றன.

நாதஸ்வரக்காரர் நிதானமாய், தலை மாட்டில் சாய்த்திருக்கிற நாயனத்தை எடுத்து இரண்டு முறை ஊதிப் பார்த்ததில், சற்றுத் தள்ளிப் படுத்திருக்கிற மேளக்காரர் புரண்டு கொள்கிறார்.

பின்னணியில் மேளம் ஒலிக்க, மண்டபம் மெல்லத் துயில் கலைகிறது.

சமையற்கட்டு.

விறகு அடுப்பு திகுதிகு என்று எரிகிறது. இராட்சதக் கேடயங்களில் ஆவி பறக்கிற இட்டிலி. வாளியில் காப்பி எடுத்து, கையில் கோபுரமாய் அடுக்கிய டம்ளர்களுடன், யாரோ அவசரப்படுத்த ஒருவன் புறப்பட்டுப் போகிறான். காலைச் சமையலுக்குக் கிலோ கிலோவாய்க் காய்கறிகள் அரிந்து கொண்டிருக்கிறார்கள்.

வரிசையாய்த் துணிமணிகள் தொங்குகிற மண்டபத்துக் குளியலறைக் கதவுகள். லக்ஷ்மிநாராயணனின் அம்மா குளித்து விட்டுப் புடைவை சுற்றி வெளியே வருகிறாள். வாயில் டூத் பிரஷ் வைத்து அவள் கணவர் அங்கே கோபமும், கவலையுமாய் நிற்கிறார். இரவுக் காட்சி சினிமாவுக்குப் போன லக்ஷ்மிநாராயணனும், நண்பர்களும் இன்னும் திரும்பி வரவில்லை.

மண்டபத்தில் விஷயம் பரவுகிறது. அதிகாலை முகூர்த்தம். மணி ஐந்தே கால் ஆகப் போகிறது. மாப்பிள்ளை லக்ஷ்மிநாராயணனைக் காணவில்லை. மணமகள் விஜயலக்ஷ்மியின் அலங்காரங்களைத் தொடர்வதா என்றும் தெரியவில்லை. விவரம் எதுவும் புரியாமல் மணமக்களைப் பெற்ற தகப்பன்கள் இருவரும் சேர்ந்து பரபரப்பாய் மண்டபத்தின் வாசலுக்கு நடந்து தெருவுக்கு வந்து திகைத்து நிற்கிறார்கள். லக்ஷ்மிநாராயணன் அப்படி எங்கேதான் போயிருப்பான்?

காலை ஐந்தரை மணி. பின்பக்கம் ஆவின் பூத் தெரிகிற டீக்கடை. சினிமா முடிந்ததும் லக்ஷ்மிநாராயணனும் அவன் நண்பர்களும் நேரே இங்குதான் வந்தார்கள். பேச்சு சுவாரஸ்யத்தில் நேரம் நகர்ந்ததே தெரியவில்லை. பெண்கள், சினிமா, கிரிக்கெட், தண்ணியடித்த அனுபவங்கள், இரகசியமாய்ப் பார்த்த புளூஃபிலிம் என்று விடலைகளாகவே வாழ்ந்து விடப் போகிற இளைஞர்கள் மாதிரி பேச்சு.

ஆவின் லாரி புறப்பட்டுப் போகிறது.

காலைப் பேப்பர்களுடன் ஒரு பையன்

சைக்கிளில் இறங்கி டீ குடித்துப் போகி றான்.

லக்ஷ்மிநாராயணனும், நண்பர்களும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். விபரீத சப் தங்களின் நடுவே டீக்கடை ரேடியோ நாராச ஸ்டேஷன் தேடலின் ஊடே துல்லியமாய்த் திடீரென்று நாதஸ்வரம் ஒலிக்கிறது.

''அடப்பாவி. மணி அஞ்சே முக்கால். ஆறு மணிக்கு உனக்குக் கல்யாணம்டா'' என்று நண்பர்களில் ஒருவன் நினைவுக்கு வந்து அலற, லக்ஷ்மிநாராயணனும் அவன் நண்பர்களும் மண்டபத்தை நோக்கி ஓங்கி தடுக்க ஓடுகிறார்கள்.

வந்த வேகத்தில் குளிக்கச் சொல்லி வைதீகர் அவசரப்படுத்த, லக்ஷ்மிநாரா யணன் வேகமாய்க் குளியலறையில் நுழைந்து - உள்ளே மாமியொருத்தி அலறி யதில் அதே வேகத்தில் வெளிப்படுகிறான்.

மறைவில் மாப்பிள்ளைக்கு வைதீகர் வேட்டியில் கச்சம் வைத்துக் கட்டிக் கொண் டிருக்க, அவன் நண்பனுக்குச் சைகை செய்து தூக்கிப் போட்டுக் கிடைத்த சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொள்கிறான்.

''அங்கேயெல்லாம் கிச்சுகிச்சு மூட்டா தீங்க, அய்யரே...''

மேற்கொண்டும் அவன் செய்கிற அமளிகளில் வைதீகர் கோபமடைகிறார். ''சாஸ்திரப்படி கல்யாணம் செய்துக் கணும்னா சொல்லுங்க, இல்லே என்னை அனுப்பிச்சுடுங்க. படுத்தி எடுக்காதீங்க.''

அவசர கதியில் மந்திரங்கள் ஒலித்து, காசி யாத்திரை, மாலை மாற்றுதல், ஊஞ்சல் என்று வேகமாய்ச் சடங்குகள் நடந்து, குழு மிய கும்பலின் நடுவே ஒரு விரல் உயர்த்து கெட்டிமேளம் எனக் கையசைக்க, மண மேடையில் பலூன்கள் வெடித்துப் பல நிறங்களில் நெட்டி மணிகள் சிதற, அட்சதை யும், மலர் இதழ்களும் பரவலாய் ஆசீர் வதித்து விழ விஜயலக்ஷ்மி - லக்ஷ்மி நாராயணன் திருமணம் நல்லவிதமாய் முடிகிறது.

**வ**ழக்கம் போல் மண்டபம் பூராவும் தேடி, பக்கத்துப் பெட்டிக் கடையிலிருந்து லக்ஷ்மிநாராயணனை யாரோ அழைத்து வரு கிறார்கள். வயதில் பெரியவர்களை நமஸ் கரித்து ஆசி பெற வேண்டும். மணமகள் விஜயலக்ஷ்மி மாலையைக் கழற்றாமல் காத் திருக்கிறாள். லக்ஷ்மிநாராயணன் வெளியே போகும் போது கழட்டி வைத்த மாலை குழந்தைகள் கையில் சிக்கி, நிமிடத்தில் தரையெல்லாம் ரோஜா இதழ்கள். புழக்கத் திலிருந்த வேறு பழைய மாலையைப் பல்லைக் கடித்துத் தேடியெடுத்து அம்மா அவன் கையில் திணிக்கிறாள். தம்பதிகள் நமஸ்கரிக்க பெரியவர்கள் காத்திருக்



''நம்மகிட்டே காசுல்லேங்கற விஷயம் சர்வருக்குந் தெரிஞ்சு போச் சுன்றியே... எப்படி?''

''இதோ பாரு... அவன் கொடுத்த 'பில்'லிலே 'இரண்டு படி அரிசி'ன்னு எழுதி இருக்கான்!...''

- காஞ்சி எஸ். ஜெய்னுதீன்

கிறார்கள். தயவுசெய்து சீக்கிரம் ஆகட்டும்.

பதிலுக்கு லக்ஷ்மிநாராயணன் குரல் மாற்றுகிறான்.

''தோ பார், தமிழன் அநாவசியமா யார் கால்லியும் விழ மாட்டான். எல்லா வய சான ஆளுங்களையும் வரிசையா நிக்கச் சொல்லு. ஒரே கும்பிடா கும்பிட்டுக் கறேன், சரியா?''

சிரித்துக் கொண்டே திரும்பியவன் எதிரில் கோபமாய் அப்பாவைக் கண்டதும் சட்டென்று தலைதாழ்த்தி வாகவமாய் மறைகிறான்.

மண்டபத்தில் பெண் வீட்டினர் பகுதி. மணமகள் விஜயலக்ஷ்மியிடம் அவள் தகப் பனார் பேசிக் கொண்டிருக்கிறார். தவறு செய்து விட்டோமோ என்று அவருக்குப் பயமாகயிருக்கிறது. மாப்பிள்ளை வெறும் விளையாட்டுப் பையனாக இருப்பான் போலிருக்கிறது. அவள்தான் தைரியமாய் அவனை வழிக்குக் கொண்டு வர வேண்டும். அவர்கள் டில்லியிலிருந்து முடிந்தபோதெல்லாம் அவளைப் பார்க்க வருவார்கள். கவலை வேண்டாம். அழக் கூடாது. 'விஜயலக்ஷ்மி, அழாதேம்மா' யென்றெல்லாம் பலவாறு கூறி அவள் தந்தை வேட்டி நுனியில் கண்களின் ஈரம் துடைத்துக் கொள்கிறார்.

அந்தப் பிரதேசத்தையே பெரும் பரபரப்புக்குள்ளாக்கி, யாரும் எதிர்பாரா வண்ணம் பெண் வீட்டினரின் அந்த அறைக் குள் ஒரு இளைஞன் திடும் பிரவேசம் செய் கிறான் -

கும்பல் இல்லாத தியேட்டரில் அன்றைய பகல் காட்சிக்கு இரண்டு டிக் கெட் ரிசர்வ் செய்து வைத்திருக்கிற மாப் பிள்ளை லக்ஷ்மிநாராயணன்.

(தொடரும்)

# பத்திரிகையாளர் படுகொலை!

வழக்கறிஞரும் பத்திரிகையாளருமான கங்காதரமூர்த்தி என்பவரின் படுகொலை கர்நாடகத்தில் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது. மண்டியா மாவட்டம் நாகமங்களாவில் காஞ்சனஹள்ளி என்ற கிராமத்தைச் சேர்ந்தவர் கங்காதரமூர்த்தி. சுறுசுறுப்பான இளைஞர். சமூக சேவைகளில் நிரம்ப நாட்டம் உள்ளவர். வக்கீல் தொழிலைக் கவனிப்பதுடன் தாம் வசிக்கும் காஞ்சனஹள்ளியில் நற்பணி மன்றம் ஒன்றிலும் செயலாளராக இருந்து சமூக சேவைகளில் ஈடுபட்டிருந்தார். அத்துடன் பத்திரிகையாளரும் கூட. பெங்களூரிலிருந்து வெளிவரும் 'லங்கேஷ்பத்ரிகா' என்ற கன்னட வார இதழுக்கு நிருபராகவும் இருந்து வந்தார்.

'லங்கேஷ் பத்ரிகா' கன்னடத்தில் வெளிவரும் நக்கீரன், தராசு ரகப் பத்திரிகை. லங்கேஷ் கன்னடத்தின் பிரபல எழுத்தாளர்களில் ஒருவர். முரட்டுத்தனமான கருத்துக்களுக்குப் பெயர் போனவர். தமது பெயரிலேயே பத்திரிகை ஆரம்பித்து, பல அரசியல்வாதிகளையும் பெரிய மனிதர்களையும் தூங்க விடாமல் செய்து வருபவர்.

கங்காதரமூர்த்தி 'லங்கேஷி'ல் எழுதிய சில கட்டுரைகள் நாகமங்களாவைச் சேர்ந்த பெரிய மனிதர்களின் தோலுரித்துக் காட்டுபவையாக இருந்தன என்று சொல்லப்படுகிறது. குறிப்பாக அந்த ஊர் இ. காங்கிரஸ் எம்.எல்.ஏ. சிவராமே கௌடாவின் செயல்பாடுகளையும் ஊழல்களையும் கங்காதரமூர்த்தி எழுதப் போக, எம்.எல்.ஏ.வின் கோபம் இவர் மீது திரும்பிற்றாம். அங்கு நடந்த பொதுக் கூட்டம் ஒன்றில் ''என்னைப் பற்றி எழுதும் கங்காதரமூர்த்தியின் கையைக் கண்டதுண்டமாய் வெட்டுவேன்'' - என்று பேசினாராம் எம்.எல்.ஏ. அது மட்டுமல்லாமல் டூரிஸ்ட் பங்களாவில் நடந்த கூட்டமொன்றில் எம்.எல்.ஏ.வின் உறவினர் ஒருவர் அந்த வக்கீலின் கையை வெட்டுபவருக்கு இரண்டு லட்சம் தருவோம் என்று பகிரங்கமாகவே அறிவித்தாராம்.

இத்தனை மிரட்டல்கள் இருந்தபோதிலும் எதைப் பற்றியும் கவலையே படாமல் தொடர்ந்து காரசாரமான கட்டுரைகள் எழுதி வந்திருக்கிறார் கங்காதரமூர்த்தி. தன்னுடைய உயிருக்கு ஆபத்து இருப்பதாகவும் பாதுகாப்பு தருமாறும் போலீஸுக்கு மனு ஒன்றையும் தந்திருக்கிறார்.

உடனடியாய் நடவடிக்கை எடுத்திருக்கிறது போலீஸ். மனு கொடுத்த அன்று மாலையே கங்காதரமூர்த்தியையே கைது செய்து கொண்டு போய் விட்டிருக்கிறார்கள்! சொல்லப்பட்ட காரணம் - கங்காதரமூர்த்தி ஒரு பெண்ணைக் கற்பழிக்க முயன்றார் என்பது.

விஷயம் ஊருக்குள் பரவிப் பிரச்னையாகி விட, இளைஞர்களும் பொது மக்களும் போராட்டத்திற்குத் தயாராகி விட்டதை உணர்ந்து கங்காதரமூர்த்தியை உடனே விடுவித்திருக்கிறார்கள். பின்னர் ஒப்புக்காக கங்காதரமூர்த்தி கொடுத்த புகாரின் பேரில் நடவடிக்கை எடுப்பதாக யாரோ இரண்டு பேரைக் கைது செய்து, மறுநாளே விடுவித்திருக்கிறார்கள்.

இது நடந்த கையோடு ஒரு நாள் காலை ஆறுமணியளவில் மூன்று பேர் ஸ்கூட்டரில் வந்து ''நற்பணி மன்றத்து



● கங்காதரமூர்த்தி

ஆட்கள் டூரிஸ்ட் பங்களாவில் கூடியிருக்கிறார்கள். உங்களை உடனே கூட்டி வரச் சொல்லுகிறார்கள்'' - என்று கூப்பிட, உடனடியாய்த் தமது ஸ்கூட்டரில் கிளம்பியிருக்கிறார் கங்காதரமூர்த்தி.

வீட்டை விட்டுச் சிறிது தூரம் வந்ததும் அங்கேயே வழி மறிக்கப்பட்டு கத்தி அரிவாள் இரும்புத் தடி என்று தாக்கப்பட்டு... அந்த இடத்திலேயே மரணம்!

தங்கள் கண்ணெதிரிலேயே தங்கள் ஊரைச் சேர்ந்த இளைஞர் படுகொலை செய்யப்படுவதைத் தடுக்க முடியாமல் அதிர்ச்சியுற்றுப் போய்ப் பார்த்துக் கொண்டிருந்திருக்கின்றனர் வயலில் வேலை செய்து கொண்டிருந்த கிராமவாசிகள்.

இந்தப் படுகொலையைத் தொடர்ந்து மண்டியா முழுமையும் ஒரே பதற்றமடைந்துள்ளது. எம்.எல்.ஏவைக் கைது செய்ய வேண்டும் என்ற கோரிக்கை வலுத்துள்ளது.

பத்திரிகையாளர்கள் சங்கமும் வக்கீல்கள் சங்கமும் போராட்டங்களை அறிவித்துள்ளன. அனைத்து வக்கீல்களும் ஊர்வலமாகச் சென்று கவர்னரிடம் மனு கொடுத்துள்ளனர். எதிர்க்கட்சியினரின் ஆர்ப்பாட்டத்துக்கு ஹெக்டே தலைமை வகித்தார். எம்.எல்.ஏவைக் கைது செய்ய வேண்டும் என்பது மட்டுமின்றி வழக்கை சி.பி.ஐ. வசம் ஒப்படைக்க வேண்டும் - போலீஸ் நிலையத்தைச் சேர்ந்த போலீஸ் அதிகாரிகள் மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதும் கோரிக்கை.

– பெர்னாண்டஸ்

மாதம் ஒரு நகரம்

# திருச்சிக்கு வருகிறோம்!

திருச்சியில், மலைக் கோட்டையும் ஸ்ரீரங்கம் கோபுரமும் கண்ணுக்குத் தெரியும் கம்பீரங்கள். இவை போல் கண்ணுக்குத் தெரியாத எத்தனையோ சாதனைகளை நிகழ்த்திக் கொண்டிருக்கும் சாதனையாளர்கள் - இளைஞர்கள் திருச்சியில் இருக்கவே செய்வார்கள்.

இதே மாதிரி மலைக் கோட்டையைவிடப் பெரிய பெரிய பிரச்னைகளும் திருச்சி நகர மக்களை வாட்டிக் கொண்டிருக்கலாம். யாரிடம் சென்று முறையிட்டாலும் தீர்வு காணப்படுவதில்லையே என்று ஏங்கிக் கொண்டிருக்கலாம்.

இவற்றையெல்லாம் நேரில் பார்த்து ஆராய்ந்து கல்கியில் எழுதுவதற்காக நாங்கள் திருச்சிக்கு வரப் போகிறோம்.

அதற்கு உதவியாகத் திருச்சி - ஸ்ரீரங்கம் நகர வாசிகள் தங்களூரில் உள்ள சாதனைகளையும் பிரச்னைகளையும் சுருக்கமாக எங்களுக்கு எழுதியனுப்ப வேண்டுகிறோம். எங்களின் நேரடி விசிட்டுக்கு உங்கள் கடிதங்கள்தான் அடிப்படை என்பதால் அனைவரும் உடனடியாக எழுதுங்கள்.

'மாதம் ஒரு நகரம் - திருச்சி' என்று உறையின் மேல் குறிப்பிட்டு, உங்கள் கடிதங்கள் எங்களுக்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 5.11.92

மீண்டும் நினைவுபடுத்துகிறோம், பிரச்னைகளை மட்டுமின்றித் தனி மனிதச் சாதனைகள், இளைஞர் சங்கங்கள் போன்றவற்றின் நற்பணிகளையும் அவசியம் எழுதுங்கள்.

– ஆசிரியர்.



# முற்றுகை

## 13

முன்கதைச் சுருக்கம் :

தீப்பெட்டி தொழிற்சாலையில் அருஞ்சுனை சாதாரண வேலையில் இருந்தான். முதலாளியின் மகள் ரத்னத்தை மணந்து மாமனாரின் மறைவுக்குப் பின் அத்தொழிற்சாலைக்கே சொந்தக்காரன் ஆனான். வசதிகள் இருந்தும் அவனுக்கு வாழ்க்கையில் சந்தோஷமில்லை. மனைவி அழகற்றவள். குழந்தையும் பிறக்கவில்லை. அவளிடம் வெறுப்பை வெளிப்படுத்தாமல் அன்பு பொழிவது போல் நடித்தான். உள் மனம் தன் தொழிற்சாலையில் வேலை செய்த சொர்ணத்திடம் நாட்டம் கொண்டது.

சொர்ணம் வசதியான குடும்பத்தில் பிறந்தவள். ஆனால் அவள் பருவமடையும் சமயத்தில் அப்பா இறந்துவிட, அவர் விட்டுச் சென்ற கடன்கள் குடும்பத்தை நொடித்துப் போகச் செய்தன. எனினும் சொர்ணத்துக்குத் தன் பிறப்பு குறித்தும் அழகு குறித்தும் கர்வம் நிறையவே இருந்தது.

ஒருநாள் சொர்ணம் வேலையிலிருந்து வீடு திரும்புகையில் அக்கா கிருஷ்ணம்மாளின் புருஷன் நாராயணசாமி தன் மகன் ரமேஷுடன் வந்திருந்தான். தாய் வேலாயியும் அவனும் இலைமறை காயாய்ப் பேசியதாகத் தோன்றியது சொர்ணத்துக்கு. அவன் வருகை நல்லதற்கல்ல என்பது உள்ளூர புரிந்தது. இரவு உணவு அருந்தியபின் எல்லோரும் தூங்கி விட, சொர்ணம் உடல் அலுப்பும் மனச்சோர்வும் தீர குளிக்க எண்ணி முற்றத்துக்கு எழுந்து போனாள்....

சிமெண்ட் தொட்டியிலிருந்த தண்ணீரைத் தொட்டுப் பார்த்தாள். ஜில்லென்றிருந்தது. இந்த அளவுக்குக் குளிர்ச்சியான தண்ணீரில் குளிக்கவா? வெடவெட என்குமே?

இனிமேல் எப்படி வெந்நீர் வைக்க? நேரங்கெட்ட நேரத்தில் அடுப்பு மூட்ட முடியுமா?

ஆனால் உடம்பு இருக்கிற இருப்பில், குளிக்காமல் உறங்க முடியாது.

சேலையை உரித்து கருட்டி வாளிக்குள் போட்டாள். ஜாக்கெட் ஊக்குகளைக் கழற்றினாள். பாவாடை நாடாவை அவிழ்த்து, உயர்த்தி மார்புக்கு மேல் கட்டிக் கொண்டாள்.

ஏனோ வெள்ளைத்தாய் ஞாபகத்தில் வந்து உரசினாள். ஸ்டோர் ரூமில் அந்த அழுக்குப் பயல் என்ன திமிரோடு துணிந்திருப்பான்.

கத்தி ஆர்ப்பாட்டம் பண்ணினால், தனக்குத்தான் கேவலம் என்ற அச்சத்தில், வெள்ளைத்தாய் கருங்கிக் கொண்டாளா?

பாவம், அந்நேரம் அவள் மனசு என்ன மாய்த் தவித்திருக்கும்...!

நின்று குளித்தால்... தண்ணீர் தெறிக்கிற சப்தம் கேட்கும். குத்துக்கால் வைத்து உட்கார்ந்து கொண்டாள். தலை மட்டத்தில் தொட்டி. எட்டித் தண்ணீர் முகர்ந்து, இடது தோளில் ஊற்றினாள்.

''ஸ்ஸ்ஸ்ஸ்....''

தை மாசக் குளிர் உடம்பெல்லாம் சிலிர்த்தது. உடம்பே ஒரு குலுங்கு குலுங்கு வதைப் போல ஆடி நடுங்கியது. நரம்புகள் அத்தனையும் விறைத்து, விம்முவது போலிருந்தது. சகல அணுக்களும் அந்தக் குளிர்ச்சியில் உறைந்து விடுமோ... உடம்பே ஒடுங்கியது.

அவள் மனசுக்குள் விதம்விதமாய்க் கற்பனைகள். வயசின் பருவக் கிறுக்கு.

இவளுக்குப் பிறகு சடங்கான மாரியம்மாள் உள்ளூரிலேயே வாழ்க்கைப் பட்டு, ரெண்டு பிள்ளைக்குத் தாயாகி விட்டாள்.

இவளையொத்த சின்னத்தாயின் மூத்த மகன் ரெண்டாங்கிளாஸில் முதல் ரேங்க்.

காலம் கை கழுவிவிட்டு நழுவிக் கொண்டு ஓட, இவள் காலத்தின் முரண்பாடாய் நிலைத்துப் போனாள்.

இவளுக்கும் மாலை பூக்குமா? மாலை பூக்கிற நேரம் வருமா? வாய்ப்பு வருமா? என்ன நம்பிக்கை இருக்கிறது?

ஒரு பொட்டுத் தங்கம் கூட இல்லை. எவன் வருவான், மாலையோடு? நகையில்லாமல், நட்டில்லாமல் அழகிருந்தால் போதும் என்று எந்த ராஜகுமாரன் வருவான்? கை நொண்டி, கால் நொண்டியாக இருக்கக்கூடிய வெறும் பயல்கூட 'அறு பவுன் போடுவியா?' என்று அதிகாரம் பண்ணுகிற காலம், இது.

இந்த லட்சணத்தில் அம்மாவுக்கு ஆசை - வெயில் முகம் பார்க்காமல் மகளை வைத்து வாழ வைக்கிறவனுக்கு முடிக்க வேண்டுமென்று, கனவு.

கை சேரக்கூடிய ஆசையா?

மேலாண்மை பொன்னுச்சாமி

குளித்து முடித்தாள். உடம்பைத் துவட்டிக் கொண்டாள். வேறு மாற்றுத் துணியை உடுத்தினாள். ஜாக்கெட்டின் கடைசி ஊக்கைச் சொருகுற போது -

மனைக்குள் பழநி வந்தான். முனியசாமியின் மகன் வழிப் பேரன். தாய் தகப்பனை இழந்தவன்.

எட்டாங்கிளாஸ் வரை, தாத்தா நிழலில் இங்குதான் படித்தான். அப்போதெல்லாம் சொர்ணம் பார்க்கவே மாட்டாள். பார்த்தாலும் பொருட்படுத்த மாட்டாள்.

முனியசாமியின் பேரன்தானே! முனியசாமி இவன் வீட்டில் விசுவாசமான வேலைக்காரன். ராமானுஜத்திற்கு எடுபிடி. இன்ன வேலை என்று கணக்கில்லை.

வீட்டுக்கு விருந்தாளிகள் வந்தால்... சாராயம் வாங்கப் போகிறவன், அவன்தான். வீட்டில் சகல வேலைகளிலும் அவன் கை ரேகை படிந்திருக்கும்.

நாய் போல - விசுவாசமான நாய்! ராமானுஜம் இறந்த அன்றைக்கு அவன் அழுத அழுகையைப் பார்த்து ஊரே வியந்து பேசியது. அந்த வீட்டில் நஷ்டப் புயல் வீசிச் சுழன்றடித்தபோதிலும், வேர் அறுந்து போகாமல் அந்த வீட்டில் நிலைத்து நின்ற மரம், அவன்தான்.

எல்லா அவலங்களும், அவமானங்களும் அந்த வீட்டைச் சூழ்ந்து கொண்ட நிலையிலும், அந்த வீட்டுக் கஞ்சியைக் கடைசி வரைக்கும் குடித்துக் கொண்டிருந்தவன்.



வேலாயியைப் பார்த்துப் பார்த்து அழுதான். குமுறிக் குமுறிப் புலம்புவான். "மகாலட்சுமி போல இருந்த அம்மா. வீட்டுக்கு விளக்காயிருந்த ராணியம்மா. இப்ப... எப்படியாயிட்டாக? இப்படியும் செய்ய எந்தச் சாமிக்காச்சும் மனசு வருமா?"

சொர்ணத்தைப் பார்த்துக் கண்ணீர் வடிப்பான்.

"தம்பளப் பூச்சி (வண்ணத்துப் பூச்சி) மாதிரி செறகடிச்சுத் திரிஞ்ச புள்ளை. செல்லத்துலேயே விளையாடி, பழம் தின்னு, பால்லே கை கழுவுன புள்ளை. இன்னைக்குச் சித்திரம் கொறைஞ்சு, கொறைக் கோலமாகிப் போச்சே...!"

என்று சொல்லிச் சொல்லி மாய்வான். கடைசியாகக் கணக்கு முடித்துப் போனது, அவன்தான். அப்பவும் போக மறுத்தான்.

"அந்த ராசா வீட்டுச் சோத்தை உண்டு வளர்ந்த உடம்பு இது. அந்த ராசா உலவுன இந்த வீட்லே கடைசி வரையில பாடு பட்டுட்டுச் செத்தாத்தான் எனக்கு நிம்மதி. சம்பளமும் வேண்டாம், ஒன்னும் வேண்டாம். உங்க வீட்டு நாயா வாசல்

படியிலே கெடந்துட்டுப் போறேனே...''

என்று மருகி மருகிப் பேசினான். கண்ணீரை வடித்தான். வேலாயிதான் வலுக் கட்டாயமாகத் துரத்தினான். வேறு வழி யில்லை.

அந்த விசுவாசமான முனியசாமியின் பேரன்தான் பழநி. எட்டாங்கிளாஸ் வரைக் கும் டவுசர் மேல் அர்ணாக் கயிறைப் போட்டு வைத்திருப்பான்.

சொர்ணத்தைப் பார்த்தால் ஒதுங்கிப் போய் விடுவான். ஒன்றுமே பேசிய தில்லை. முனியசாமி சொர்ணத்தைப் பற்றிக் கதை கதையாக நிறையச் சொல்லி யிருப்பான். அதனால், ஒரு மரியாதையுடன் ஒதுங்கிப் போய் விடுவான்.

அப்புறம் ரொம்ப நாளாகப் பார்க்கவே யில்லை. கண்ணில் தட்டுப்படவேயில்லை. என்ன ஆனான் என்று நினைத்ததுமில்லை. நினைக்கும்படியாக மனசில் எந்தத் தடமும் பதியவுமில்லை.

முனியசாமியின் குடிசை, ஊரின் கோடி ஓரத்தில் இருக்கும். கப்பி ரோட்டின் விளிம் பில் இருக்கும்.

அன்றைக்கு -

வேலை முடிந்து திரும்புகிற போது, கருகருவென்று மயங்கி விட்டது. முகம் மங்குகிற அளவுக்கு இருட்டு. தெரு விளக் குகள் கண் விழித்து விட்டன.

கெங்கு, எல்லோரும் பிரிந்து அவரவர் வீடுகளுக்குச் செல்ல... சொர்ணம் தனித்து நடந்தாள்.

முனியசாமியின் குடிசையைக் கடக்கிற போது - ஒரு சப்தம். சரம் சரமாய் வார்த் தைகள். பாட்டுமில்லை. ராகமில்லாமல்... வருகிற வார்த்தைச் சரங்கள். ஒரு தாள லயத்தோடு கம்பீரக் குரலில் நடைபோடு கிற வாக்கியங்கள்.

இதென்ன... கவிதையா? கவிதை வாசிக்கிற இந்தப் புதுக்குரல் யார்? பாரதி யார் கவிதையா?

முனியசாமிக்கு இதெல்லாம் தெரி யாதே... 'அ' 'ஆ' என்கிற அட்சரமே தெரி யாதே... அப்புறம் எப்படி கவிதை வாசிப் பது?

எட்டிப் பார்த்து விடலாமா? யார் என்ற கேள்வி உள்ளுக்குள் குறுகுறுக்க... குடைய ஆரம்பித்து விட்டது. பெண் என்கிற கட்டுக் குள் தன்னை அடக்கிக் கொண்டு நடந்தாள். மனசுக்குள் அதே கேள்வி. யார்?

மறு வாரம். அந்த ஊரில் பெருமாள் கோவில் திருவிழா. பட்டிமண்டபம். மதுரையிலிருந்து பேச்சாளர்கள் வேனில் வந்து இறங்கியிருந்தனர். பெரிய பெரிய கல்லூரிப் பேராசிரியர்கள்.

ஊர் ஜேஜே என்று கூடிக் கிடந்தது. ஆண்களும், பெண்களும், கிழடுகளும் சிறிசுகளுமாய் ஏகக் கூட்டம். பக்கத்துக் கிராமங்களிலிருந்து கூட டக்கர்களில் வந்தி ருந்தது, ஜனக்கூட்டம்.

பட்டிமண்டபம் பேச்சாளர்கள் வந்த பின்னும் நடக்கவில்லை. அவர்களுக்குள் ஒரே குசுகுசுப்பு. திகைப்பு.

யாரோ ஒரு பேச்சாளர் வரவில்லை யாம். கல்லூரிப் பேராசிரியராம். வர வில்லை. அவருக்குப் பதிலாய் யாரைப் போட? அதுதான் அங்கு பிரச்னை.

நேரம் ஜாமமாகி விட்டது. இன்னும் ஜனங்கள் ஆர்வத்தில் அலைபாய்ந்தனர். நடுவர் பெரிய பேராசிரியராம். பட்டி மண்டபத்திற்கென்றே பிறந்தவராம். சரக் கும் சிரிப்புமாய்ப் பேசுவதில் வல்லவராம். டி.வி., வானொலி என்பது அவருக்குத் தண்ணீர்ப்பட்ட பாடாம். அம்புட்டுப் பிராபல்யமாம். பெரிய பெரிய சினிமா டைரக்டர்கள் எல்லாரும் இவரது பேச்சுக்கு ரசிகர்களாம்...

நடுவர்தான் கூட்டத்தின் மொத்தக் கவர்ச்சி. ஈர்ப்பு.

பட்டிமண்டபம் துவக்கத் தயங்குகிற நிமிஷங்களில் ஒரே பரபரப்பு. குசுகுசுப்பு.

'அந்தா இந்தா' என்று பட்டிமண்டபம் துவங்கியது; மேடையின் நடுவில் நடுவர். இடதுபுறம் மூவர். வலதுபுறத்தில் மூவர்.






அட... வலதுபுறத்தில் புதிய ஆள். யார் இது? வெள்ளை வேட்டியும், சந்தனக் கலர் ஷர்ட்டுமாய். உயர்த்தி வெட்டிய 'போலீஸ்' முடிவெட்டு. நல்ல இளவட்டம். முகத்தில் வயசுக்குப் பொருந்தாத பெரிய மனிதத் தோரணையான கொத்து மீசை. கூட்டத் தையே பார்த்த அவர் பார்வையில் சிந்தனைத் தீவிரம்.

யார் இந்த இளைஞன்? பார்த்த முக மாய்த் தோன்றுகிறதே... ஆனால் அடை யாளம் தெரியவில்லையே...

சொர்ணத்துக்குள் குறுகுறுப்பு. சுற்றி லும் இருக்கிறவர்களின் முணுமுணுப்பு களிலிருந்து மேடையிலிருக்கும் புதியவன் உள்ளூர்க்காரன் என்று தெரிகிறது. யார் என்று தெரியவில்லை.

நடுவர் அசந்து போனார். ஒரு பட்டிக் காட்டு இளைஞனிடம் இத்தனை ஆழமா? இப்படியோர் பாரதி நேசமா?

அசந்து போன நடுவரின் பிரமிப்பான பாராட்டில் கிராமம் பெருமிதப்பட்டது. நெஞ்சு நிமிர்த்தியது.

தன் வீட்டில் விசுவாசமான நாயாக உழைத்த முனியசாமியின் பேரன்தான், அவன் என்று கேள்விப்பட்ட போது... சொர்ணம் அதை ஜீரணிக்க முடியாமல் திணறினாள்.

'நான் பார்த்து பிரமிக்கிற நிலையில், என் வீட்டு வேலைக்கார வாரிசா?'

வெளிப்படையாக அவனை அலட்சி யம் பண்ணிப் பேசினாள். ராசாத்தியிடம் பேசுகிற போது அவனை எடுத்தெறிந்து வீசினாள்.

இவர் : இந்தப் புஸ்வாணத்தில் அப்படியென்ன விசேஷம்?

கடைக்காரர் : இதைக் கொளுத்தின வுடனே உங்க ஏரியா எம். எல். ஏ. கொடுத்த வாக்குறுதியெல்லாம் பூப் பூவா அழகாக் கொட்டும்!

- எஸ். ரமேஷ்



அவர் : இந்தா பாரு... நம்ம குழந்தைகளுக்குத் தலைல ரிப்பன் மாட்டாதே!

மனைவி : ஏன்?

அவர் : கொஞ்ச நாளா ஒரு திறப்பு விழாவும் இல்லை... ரிப்பனைக் கண்டாலே கட் பண்ணணும் போல வெறி வருது!

- அம்பை தேவா



பட்டிமண்டபம் ஒரே சிரிப்பும் கூத்து மாய் நகர்ந்தது. நடுவர் ஜொலிக்கிறார். அவரது முகமும் சமயோசிதமான தையாண் டிகளும், ஒரே சிரிப்புத்தான்.

சிரித்துச் சிரித்து வயிறே புண்ணாகிப் போய் விட்டது.

'குடும்பங்கள் முன்னேறுவதற்குப் பெரிதும் காரணமாயிருப்பது பெண்களே - ஆண்களே' என்ற பட்டிமண்டபத் தலைப் பில் 'ஆண்களே' என்ற அணியில் கடைசி யாகப் பேச வந்தான் உள்ளூர்க்காரன்.

மைக்கின் முன்வந்து நின்றான். மௌன மாய்க் கூட்டத்தை ஒரு சுற்று சுற்றிப் பார்த் தான். முகத்தில் ஒரு பீதி. சிறு பதற்றம்.

கணீர்க் குரலில் பாரதியின் கவிதை யோடு துவக்கினான்.

ஒவ்வொரு வார்த்தையும் அரிவாள் வீச்சாக வந்து விழுந்தது. யாரும் தொடாத ஆழத்தில் பதிகிற அவனது வீச்சு.

ஆனால் - உள்ளுக்குள்...

பழநியின் கம்பீரத்தை மறுக்க முடிய வில்லை. அவனது அடக்கம் மிகுந்த அறிவுத் தீவிரத்தை - ஞானச் செருக்கை - யோசிக் காமல் இருக்க முடியவில்லை.

இப்போது....

தனைத்தனிமையில் குளிக்கும் போது பழநியின் நினைப்பு வருவானேன்! மனசின் அந்தரங்கமான அந்தப்புர நினைவில் அவன் நுழைவானேன்...

அவனுக்கு அவ்வளவு கௌரவமா? ச்சேச்சே! இதில் தன் கௌரவம் என்ன ஆவது?

ஒரு சிலிர்ப்போடு தன்னை உலுக்கிக் கொண்டாள். தனது அகந்தையைக் காப் பாற்றிக் கொண்டாள் சொர்ணம்.

(தொடரும்)

தீபாவளி சிறப்பிதழுடன் இலவச இணைப்பு

# கல்கி

25.10.92



# உங்கள் கண்மணியை வளர்க்க ஒரு கையேடு

## ஒரு தாய் தயாராகிறாள்

பெண் என்று பிறந்து விட்டால் அவள் மகப்பேறு என்னும் மகிழ்ச்சியான கடமைக்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டியதுதான். எட்டு ஒன்பது வயது ஆகும்போதே பெண் குழந்தைகளுக்கு ஊட்டச்சத்து மிகுந்த உணவு வகைகளை, குறிப்பாக இரும்புச் சத்து நிறைந்தவற்றைக் கொடுத்து உடல் வளர்ச்சியைக் கவனிக்க வேண்டும். இதன் குறைபாடால் தான் முகப்பரு போன்றவை தோன்றுகின்றன.

வெல்லம், கேழ்வரகு சேர்ந்த உணவு வகைகள் நல்ல உடல்வாகு பெற உதவுவதோடு, பெண் குழந்தை வளர்ந்து தாயாகும் பருவத்தில் 'சிசேரியன்' போன்ற சங்கடங்களைத் தவிர்க்கவும் உதவும்.

## பேறுகாலக் கவனிப்பு

பேறுகாலம் மூன்று பகுதிகளாகப் பிரித்துப் பார்க்கப்பட வேண்டும்.

முதல் மூன்று மாதங்களில் குழந்தையின் கை கால்கள், மூக்கு வாய் போன்ற உறுப்புக்கள் உருவாகும். இயங்காத நிலையில் இருதயமும் இக் காலத்திலேயே உருப்பெற்று விடுகிறது. இந்தக் காலத்தில் கருவுற்றுள்ள தாய்க்கு எந்தவிதமான மருந்தும் தரக் கூடாது. அவளுக்குத் தரும் மருந்துகளில் எது பின்விளைவுகளை ஏற்படுத்திக் குழந்தையின் ஆரோக்கியமான வளர்ச்சிக்கு ஊறுவிளைவிக்கும் என்பதைக் கணிக்கவே முடியாது. எனவே பேறுகாலத்தில் தாயை நோய் நொடிகளின் தாக்குதலுக்கு ஆட்படாமல் கவனித்தல் மிக மிக அவசியம்.

பேறுகாலத்தில் 4 முதல் 6 ம் மாதம் வரையிலும் இரண்டாவது கட்டமாகப் பிரிக்கிறார்கள். இந்தச் சமயத்தில் குழந்தையின் இருதய இயக்கம் தொடங்குவதோடு, உருவ அமைப்பும் சீரான வடிவம் பெறுகிறது. இந்தக் காலத்தில் பேருந்துகளிலோ மற்ற வாகனங்களிலோ அடிவயிறு அழுந்தப் பயணம் செய்வதையும், நெரிசலிலும் இரவு நேரங் கடந்தும் பயணம் செய்வதையும் தவிர்க்க வேண்டும். இக் காலத்திலும் மருந்துகள் உட்கொள்ளுதல் கூடாது. மூன்றாவது கட்டத்தில் (7-9 மாதங்கள்) இரத்த அழுத்தம், சர்க்கரை அளவு, புரத அளவு போன்றவற்றைச் சோதனை செய்து கவனிக்க வேண்டும். இவற்றைச் சீர்செய்ய அவசியம் இருந்தால் மருந்தை நாட வேண்டும் என்பதில்லை. உணவுக் கட்டுப்பாடு, ஓய்வு - இவையே போதுமானது. எட்டு ஒன்பது மாதங்களில் பேறுகால நீரிழிவு (Gestational Diabetics) ஏற்படலாம். இது பின்னால் நீரிழிவு நோய் ஏற்படக்கூடும் என்பதற்கான ஓர் அறிகுறிதான். அவ்வாறே, அல்புமின் என்னும் புரதம் அதிகமாக வெளியேறுமாயின் தாயின் உடம்பு ஊதிப்பருக்க வாய்ப்புண்டு. இவையெல்லாம் கட்டுப்படுத்தக்கூடிய குறைபாடுகள்தாம்.

'அல்ட்ரா ஸோனோ கிராம்' என்னும் கருவியின் மூலம் தாயின் வயிற்றில் உள்ள குழந்தையின் நிலை, இரட்டை குழந்தையா என்னும் விவரம் போன்றவற்றை அறிந்து கொண்டு சுகமான பிரசவத்துக்கு உதவ முடிகிறது. 'ஃபீடோஸ்கோப்' என்னும் கருவியின் மூலம் கருவிலுள்ள குழந்தையின் இருதயத் துடிப்பின் வேகத்தைக் கண்காணித்துக் கவனிக்கவும் முடிகிறது.

## 'சுதந்திரம்' பெறும் குழந்தை!

ஆரோக்கியமான குழந்தை என்பது 2.5 கிலோ எடைக்குக் குறையாமலிருக்க வேண்டும். நான்கு கிலோவுக்கு மேல் இருந்தால் பெரிய குழந்தையாக இருக்கும். (குழந்தை அளவு பெரிதாக இருந்தால் தாய்க்கு நீரிழிவு நோய் வரக்கூடும்.)

குழந்தை பிறந்த உடனே நன்கு அழத் தொடங்க வேண்டும். இதுவே ஆரோக்கியமான குழந்தைக்கு அறிகுறி. கருப்பை அழுத்தத்திலிருந்து வெளிப்பட்டுச் 'சுதந்







திரம்' பெறும் குழந்தை வெளி உலகில் வந்து காற்றை நன்கு இழுத்து மூச்சுவிடத் தொடங்குகிறது. இதன் முதல் அறிகுறிதான் அழுகை.

வயிற்றுக்குள் உள்ள குழந்தை சுவாசிப்பதில்லை. அதன் நுரையீரலில் தண்ணீர் நிறைந்திருக்கும். கருப்பை வாய் வழியே இயற்கையான அழுத்தத்தில் அது வெளிப்படும் போது நுரையீரல் தண்ணீர் அழுத்தப்பட்டு வெளியேறி விடும். 'சிசேரியன்' முறையில் குழந்தையை எடுக்கும் போது இது சாத்தியமில்லை. எனவே செயற்கையாக டாக்டர்களால் இந்தத் திரவம் வெளியேற்றப்படுகிறது.

நுரையீரல் மற்றும் இதயம் சரிவர இயங்குகிறதா என்பதைக் கண்காணிக்க APGAR SCORE என்று டாக்டர்கள் ஒரு கணக்கு வைத்திருக்கிறார்கள். இதன்படி குழந்தையின் ஆரோக்கியமான நிலையை அறிய முடியும்.

பிரசவ வலி ஏற்பட்டுக் குழந்தை வெளிவரத் தாமதமானால், அழுத்தம் தாளாமல் குழந்தை வயிற்றுக்குள்ளேயே சிறுநீர் கழித்து விடும். 'மெக்கோனியம்' என அழைக்கப்படும் இந் நிலை ஆபத்தானது. இந்தக் கழிவு குழந்தையின் வாயில் போகுமானால் குழந்தைக்கு மூச்சுத் திணறல் ஏற்பட்டு, இருதயத் துடிப்பு பாதிக்கப்படும்.

ஆகவேதான், மிகக் குள்ளமான உருவ அமைப்புள்ள தாய், குறுகலான இடுப்பு வாகுள்ள பெண் - இவர்களின் பேறுகால நேரம் அதிகப்பட்டால் பாதுகாப்புக்காக சிசேரியன் மூலம் குழந்தையை வெளியே எடுக்க வேண்டி வருகிறது.

## ஓர் அமெரிக்க அனுபவம்

அண்மையில் தமது மருமகளின் பேறுகாலத்திற்காக அமெரிக்கா சென்று வந்த திருமதி சரசுவதி இராமசுப்பிரமணியன் கூறினார் :

''மகப்பேறுக்கு முன்னால் நான்கு மாதங்கள் கணவன் மனைவி இருவருக்குமே பிரசவம், குழந்தை வளர்ப்பு பற்றிய வகுப்புக்கள் நடத்துகிறார்கள். வீடியோ காஸட் பாடங்களும் உண்டு. குழந்தைக்குத் தாய் எப்படிப் பாலூட்ட வேண்டும் என்பதை விளக்க மட்டும் தனியாக ஒரு காஸட் உண்டு!

''மகப்பேறு நேரத்தில் கணவனும் உடன் இருக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள். இன்னும் சொல்லப் போனால் குழந்தையின் தொப்புள் கொடியைக் கத்திரித்தது கூட எங்கள் மகன்தான்.''

நம் நாட்டிலும் இப்போது Pre Natal Classes என்ற பிரசவத்துக்கு முந்திய வகுப்பு



குழந்தை வளர்ப்பில் தந்தைக்கும் சம பங்கு உண்டு என்ற தற்கால சிந்தனைக்கு வலு சேர்க்கும் முகமாகத்தான் பிரசவத்தின் போது உடனிருக்கச் சொல்கிறார்கள்.





சிருஷ்டியின் அற்புதத்தைத் தம்பதிகள் புரிந்து கொண்டு பகிர்ந்து கொள்வதால் குழந்தை வளர்ப்பில் புதிய கண்ணோட்டங்கள் ஏற்படுகின்றன.



களைச் சில தனியார் மருத்துவமனைகள் நடத்துகின்றன. அயல்நாடுகளில் பயிற்சி பெற்ற சில டாக்டர்கள் இந்தியக் கணவன்மார்களையும் பிரசவத்தின் போது மனைவியுடன் இருக்கச் செய்கிறார்கள். இவையெல்லாமே உணர்வுபூர்வமான பந்தத்தை - ஈடுபாட்டை வலுப்படுத்தும் நோக்கில் தான். குழந்தை வளர்ப்பில் தந்தைக்கும் சம பங்கு உண்டு என்ற தற்கால சிந்தனைக்கு வலு சேர்க்கும் முகமாகத்தான் பிரசவத்தின் போது உடனிருக்கச் சொல்கிறார்கள். பல ஆண்களுக்கு இது சாத்தியப்படுவதில்லை. வலுக்கட்டாயமாக இருக்கச் செய்தால் தாயையும் சேயையும் கவனிப்பதுடன் மயங்கி விழும் தந்தையையும் கவனிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது!

பேறு காலத்தில் மனைவி பெறும் அனுபவங்களை விளக்கும் புத்தகங்களைப் படிப்பதும் Pre Natal வகுப்புகளுக்குச் செல்வதுமே போதுமானது. சிருஷ்டியின் அற்புதத்தைத் தம்பதிகள் புரிந்து கொண்டு பகிர்ந்து கொள்வதால் குழந்தை வளர்ப்பில் புதிய கண்ணோட்டங்கள் ஏற்படுகின்றன.

### பாப்பாவுக்குப் பசிக்கிறதா...?

குழந்தை பிறந்து இரண்டு முதல் ஆறு மணி நேரத்திற்குள்ளாகவே தாய்ப்பால் தரத் தொடங்கலாம். குழந்தை பெரிதாக இருந்தால் அதன் உடல்வாகுக்கு ஏற்ப நிறையப் பசிக்கும். அப்போது அதற்குத் தாய்ப்பால் ஊட்டாவிட்டால் 'ஹைப்போ கிளைசிமியா' என்னும் நிலை ஏற்படும். (இரத்தத்தில் சர்க்கரைக் குறைவு) இருப்பினும் தாயின் உடல்நிலை பலவீனமாக இருந்தால் குழந்தைக்குக் கொஞ்சம் சர்க்கரைத் தண்ணீர் தரலாம். இது குழந்தையின் குடல் பகுதியில் அடைப்பு இருப்பின் அதைச் சீராக்க உதவுகிறது.

குழந்தை பிறந்து இரண்டு நாட்கள் வரை சுரக்கும் தாய்ப் பாலில் (இதைச் சீம்பால் (கொலஸ்ட்ரம்) என்பார்கள்) மிக அதிகமான அளவு புரதச் சத்து உள்ளது. இதைக் குழந்தை பருகுவதால், அதன் குடல் பகுதியின் உள்ளே சென்று பூச்சு மாதிரி படிந்து 'டயரியா' ஏற்படாமல் தடுக்கிறது. அத்துடன் சீம்பாலில் உள்ள 'இம்யூனோகுளோபிலின்' என்னும் பொருள் புதிய குழந்தையின் ஆரோக்கிய வளர்ச்சிக்குத் தேவையான எதிர்ப்புச் சக்தியையும் தருகிறது.

'எப்போது குழந்தைக்குப் பசிக்கும்?' என நாம் கவனிக்க வேண்டியதில்லை. குழந்தை தனக்குத் தேவையான உணவைத் தேவையான நேரத்தில் அருந்திக் கொள்ளும். இதை "DEMAND FEED" என்பார்கள். எனவே தாய்ப்பால் புகட்டும் போது குழந்தைக்கு வயிறு நிரம்பி விட்டதா இல்லையா என்று கவலைப்படவே தேவையில்லை. மூன்று மாதங்கள் வரை தினமும் பத்து முதல் இருபது முறைகள் வரை தாய்ப்பால் அவசியம் கொடுத்தே ஆக வேண்டும்.





வேலைக்குப் போகும் பெண்கள் என்பதற்காக இயற்கையின் தேவைகளைப் புறக்கணிக்க முடியாது.

மாடு, கன்று குட்டியை இழந்தால் பால் கரப்பது நின்று விடும். இன்னும் சொல்லப் போனால் பால் கறக்கும் ஆள் மாறினால் கூடச் சுரக்கும் பாலின் அளவு குறையும். ஆகவே, பால் சுரத்தல் என்பது உணர்ச்சிகளோடு (emotion oriented) தொடர்புடையது. வீடுகளில் ஏதாவது துயரச்சம்பவம் நிகழ்ந்து விட்டாலும் தாயின் பால் சுரப்பு பாதிக்கப்படும். எனவேதான் தாய்மார்கள் எவ்வளவுக்கு எவ்வளவு தன்னம்பிக்கை வைத்திருக்கிறார்களோ அந்த அளவுக்குப் பால் சுரப்பதும் அதிகமாக இருக்கும் என்கிறார்கள்.

தாயாருக்கு ஓய்வு கொடுக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு, பாட்டில்களைப் பயன்படுத்த வேண்டாம். இறைக்கிற கிணறே சுரக்கும் என்கிற மாதிரி, எவ்வளவுக்கெவ்வளவு பால் கொடுக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு தாய்ப்பால் சுரப்பதும் அதிகமாகிறது.

சாதாரண சுகவீனங்களுக்காகத் தாய்ப்பால் கொடுப்பதை நிறுத்த வேண்டாம். கண்டிப்பாகப் பால் கொடுக்க முடியாத சுகவீனம் ஏற்பட்டால் பாலை மார்பில் தேங்க விடாமல் அவ்வப்போது வெளியேற்றி விட வேண்டும்.

பாலூட்டும் காலத்தில் கருத்தடை மாத்திரைகளைப் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும். இம் மாத்திரைகள் பால் சுரப்பதைக் குறைக்கும்.

தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகளுக்குத் தனியாகத் தண்ணீர் தர வேண்டிய அவசியமில்லை. தாய்ப்பாலிலேயே போதுமான அளவு (82.20%) தண்ணீர் உள்ளது. கடுமையான வறட்சி போன்ற காரணங்களால் சிறுநீர் அதிகம் வெளியேறாமல் இருந்தால், குழந்தைக்குத் தண்ணீர் தேவைப்படலாம். அப்போது, நன்கு கொதித்து, ஆறவைத்த வெறும் தண்ணீரை ஸ்பூனில் எடுத்துக் கொடுக்க வேண்டும். சர்க்கரை வேண்டாம். இனிப்புச் சேர்த்தால், குழந்தையின் பசி குறைவதோடு, தாய்ப்பால் குடிக்கும் ஆசையும் குறைந்து விடும்.

**பா**லூட்டுவதில் தாயின் நிலை மிகவும் முக்கியமானது. வசதியாக அமர்ந்து கொண்டு மடியில் ஒரு தலையணையை வைத்துக் கொண்டு அதன் மீது குழந்தையை வைத்துக் கொண்டு பாலூட்டுவது நல்ல ஆரோக்கியமான நிலை.

சில குழந்தைகளுக்குப் பாலைத் தாயின் மார்பிலிருந்து உறிஞ்சிக் குடிக்கத் தெரியாமல் இருக்கும். இதற்குத் தாயின் முலைக் காம்பு தட்டையாக அமைந்து விடுவதும் காரணமாக இருக்கலாம். இப்படிப்பட்ட தாய்மார்களுக்குப் பேறுகாலத்தின் போதே மஸாஜ் முறையில் சரிசெய்து விடலாம்.

இரட்டைக் குழந்தைகள் பிறந்து விட்டாலும் மாற்றி மாற்றிப் பால் தர வேண்டியதுதான். இடையிடையே புட்டிப் பால் தரலாம். மூன்று சதவிகிதக் கொழுப்புச் சத்துடன் நிலைப்படுத்தப்பட்ட 'ஆவின்' பாலைக் குழந்தைக்கு நன்றாகக் காய்ச்சி ஆறவைத்துத் தரலாம்.

## வேண்டாம் பாட்டில்கள்!

புட்டிப் பால் தரும் போது பயன்படுத்தப்படும் ரப்பர் நிப்பிள்தான் பல நேரங்களில் நோய்த் தொற்று ஏற்பட முதல் குற்றவாளியாக அமைந்து விடுகிறது. எவ்வளவுதான் கொதிநீரில் 'ஸ்டெரிலைஸ்' பண்ணி எடுத்தாலும், ஆறி விட்டதா என்று பார்ப்பதற்காக விரல் நுனியால் தொட்டுத் தொலைப்போம். அல்லது பால் சரியாக வருகிறதா என்கிற கவலையில் விரலால் அழுத்திப் பார்ப்போம். இந்தக் கணநேரப் பாதுகாப்பின்மை கூட நுண்கிருமிகளுக்குக் கொண்டாட்டமாகி விடும்.

தவிர இந்த ரப்பர் நிப்பிள்களில் ஏற்படும் ஒருவித வாசனை குழந்தைகளைக் கவராமல் போகலாம். இன்னும் ஒரு படி மேலே போனால் - நிப்பிள் மூலம்



குழந்தைக்குச் சர்க்கரை தருகிறேன் என்கிற சாக்கில் ஆளுக்கு ஆள் குழந்தையின் வாயில் விரல்களை நுழைப்பது ஆபத்து. மிகவும் அருவருப்பான, நோயை வரவழைத்துச் சீராட்டுகிற இந்தப் பழக்கம் வேண்டாம்.



குழந்தைக்குச் சிரமப்படாமல் பால் குடிக்க முடிவதால் அதற்கு ஒருவிதமான சோம்பேறித்தனம் கூட முளையிலேயே ஏற்பட்டு விடுகிறது. இதனால் சற்றுச் சிரமப்பட்டுத் தாய்ப்பால் பருக முரண்டு பண்ணுகிறது.

குழந்தைகளுக்குப் பாலூட்ட அந்தக் காலத்துப் பாலாடைகள் மிகவும் சிறந்தவை. இப்போது 'ஃபீடர் தம்ளர்'கள் கிடைக்கின்றன. பிளாஸ்டிக் பொருளான இதைப் பயன்படுத்தினால் பல் முளைக்கும் காலத்தில் குழந்தைகள் கடித்துக் கொண்டு பால் பருக வசதியாக இருக்கும். தவிர இதை 'ஸ்டெரிலைஸ்' செய்வதும் சுலபமானது.

## டாக்டரிடம் ஓட வேண்டாம்!

வளர்ச்சி நிலையிலுள்ள சின்னக் குழந்தை அதிக முறை மலம் கழிக்கிறதே என்று அஞ்ச வேண்டியதில்லை. ஒருநாளில் இருபது முறை தாய்ப்பால் கொடுத்தால் அத்தனை முறை அது மலம் கழிப்பதில் பயப்பட ஏதுமில்லை. மலம் சற்று நீர்த்துத் தான் இருக்கும். இதைப் பேதியாகிறது என்று எண்ண வேண்டியதில்லை. குழந்தையின் குடல், அதன் உணவுப் பழக்கத்துக்கு ஏற்பச் சீரடையும் வரை பத்து முறையோ அல்லது இரு நாளுக்கு ஒரு முறையோ மலம் கழிக்குமாயினும் கூட மிரள வேண்டாம். நாளடைவில் இது சீராகி விடும்.

## செரிமானமின்மை

வடமாநிலங்களிலும், தெற்கே சில பகுதிகளிலும் 'லாக்டோஸ் இன்டாலரன்ஸ்' எனும் ஒருவிதமான என்சைம் குறைபாட்டுடனேயே குழந்தைகள் பிறக்கின்றன. இந்தக் குழந்தைகளால் தாய்ப் பாலைச் செரித்துக் கொள்ள முடிவதில்லை. இத்தகைய குழந்தைகளுக்கு லாக்டோஸ் இல்லாத 'நியூரோபீ' போன்ற உணவு வகைகளைத் தரலாம். இதில் அரிசிக் குருணையோடு சோயாபீன் மாவும் கலந்திருக்கும். இந்த 'லாக்டோஸ் இன்டாலரன்ஸ்' என்னும் கோளாறு தற்காலிகமாக இருந்து இரண்டு நாட்களில் சரியாவதும் உண்டு. அதன் பின்னரும் குழந்தைக்குப் பேதியானால் அதை டாக்டரிடம் காட்டிச் சோதனை செய்து கொள்வது நல்லது.



### கேரளாவைப் பார்!

அங்கே குழந்தை பிறந்த ஐம்பத்திரண்டு நாட்களிலேயே கேழ்வரகுக் கஞ்சியைப் பழக்கப்படுத்தி விடுகிறார்கள். இதில் கால்சியம், இரும்புச் சத்து நிறைய உண்டு. கேழ்வரகுக் கஞ்சியோடு பசும்பால் கலந்து தரலாம். மூன்று மாதங்களான பின்னர் காரட்டை நன்கு வேகவைத்து மசித்து, நீருடன் சர்க்கரை சேர்த்துத் தரலாம். ஒரு நாளைக்கு ஒருமுறை போதும். கேரட்டில் விட்டமின் ஏ சத்து இருப்பதால் பார்வைக் கோளாறு ஏற்படாமல் இருக்கும். தக்காளி ஆரஞ்சுப் பழங்களின் சாறு சில குழந்தைகளுக்கு ஒத்துக் கொள்ளாமல் போகலாம். காரட் சாறு! - எல்லாக் குழந்தைகளுக்குமே ஏற்றது.

நம் மாநிலத்தைப் பொறுத்தவரை, 85 நாட்களிலிருந்து கேழ்வரகுக் கஞ்சி ஒரு முறை தரலாம். உலர்ந்த திராட்சைப் பழத்தை நீரில் ஊறவைத்து அந்தச் சாற்றின் சில ஸ்பூன்களைத் தருவது நல்லது. மலச்சிக்கல் ஏற்படாமல் இது தடுக்கும்.



குழந்தைக்கு
இரண்டு மாதம் வரை
இரண்டு மூன்று முறையும்
அப்புறம் ஓர் ஆண்டு
முடியும் வரை மாதம்
ஒருமுறையும்
கண்டிப்பாய்
டாக்டரைச் சந்தித்து
ஆலோசனை
பெற வேண்டும்.

### வயிற்று வலிக்கு...

சமயங்களில் குழந்தை கைபிடிபடாமல் அழக்கூடும். வயிற்று வலி காரணமாக இருக்கலாம். அப்போது குழந்தையைக் குப்புறப் படுக்க வைக்க வேண்டும். வயிறு இலேசாக அழுந்தி இதமாய் இருக்கும்.

பொதுவாகச் சிறு குழந்தைகள் நல்ல சங்கீதத்தைக் கவனிக்கின்றன. வயிற்று வலியை உணரும் குழந்தைகள் மெலிதான வயலின் சிதார் போன்ற இசைக்கு மயங்கி அழுகையை நிறுத்தி விடுகின்றன. சில குழந்தை மருத்துவ மையங்களில் இந்தக் 'கருவி இசையை' அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.



### போற்ற வேண்டிய பரம்பரைப் பழக்கங்கள்

ஒவ்வொரு வீட்டிலும் குடும்பப் பெரியவர்கள் 'கை மருந்து' என்று வைத்திருப்பார்கள். அவர்கள் வழக்கப்படி அதைத் தருவதில் தவறில்லை. குழந்தை பிறந்து ஆறு மாதம் வரை தாயையும் சேயையும் 'ஒரே யூனிட்' ஆகக்கருத வேண்டும். அதற்கேற்பத்





ஏழாம் மாதம் வாக்கில் சொட்டு நெய் சேர்க்கலாம். ஏழு மாதத்துக்குள் குழந்தைக்கு எல்லா உணவுகளின் சுவையையும் பழக்கி விட வேண்டும். இல்லாவிட்டால் வளர்ந்த பிறகு சாப்பிடவே அடம்பிடிக்கும்.



தாயின் உணவுப் பழக்கங்கள் மிகவும் கட்டுப்பாடானவையாக இருத்தல் வேண்டும். பத்தியச் சாப்பாடு என்பது தாய்ப்பால் போதுமான அளவு சுரப்பதற்கு உதவும் என நம்பலாம்.

பண்டை நாள் வழக்கங்களின்படி தாயையும் குழந்தையையும் பதினோரு நாட்கள் வரை தனியறையில் வைத்திருப்பார்கள். அது மிகவும் நல்ல மரபு. அநாவசியமாகக் கண்டவர்கள் எல்லாம் குழந்தையைத் தொட்டு தேவையில்லாத நோய்த் தொற்று ஏற்படாமல் பாதுகாக்க அந்த முறை ஏற்றதுதான்.

'புண்ணியாவசனம்' என்று ஒரு மங்கல நிகழ்ச்சியை நடத்திக் குழந்தையை உலகத்துக்கு அறிமுகம் செய்வதை ஒரு விழாவாகவே கொண்டாடுகிறோம். அன்று வீட்டை மிகவும் தூய்மைப்படுத்தித் துணிகளைச் சலவைக்குப் போட்டு என்று மிகவும் சிறப்பான சுகாதார ஏற்பாடாகவே நடத்துகிறார்கள். எனினும் குழந்தைக்குச் சர்க்கரை தருகிறேன் என்கிற சாக்கில் ஆளுக்கு ஆள் குழந்தையின் வாயில் விரல்களை நுழைப்பது போன்ற ஆபத்தும் அப்போதுதான் நிகழ்கிறது. மிகவும் அருவருப்பான, நோயை வரவழைத்துச் சீராட்டுகிற இந்தப் பழக்கம் வேண்டாம் என்று பக்குவமாகச் சொல்லித்தான் தடுக்க வேண்டும்.

## உணவுப் பழக்கம்

ஐந்தாம் மாதத்தில் புளிப்பு இல்லாமல் குழந்தைக்குத் தயிர் சேர்க்கலாம். கொஞ்சம் இட்லி தரலாம். பால் கூடச் செரிமானமாக இடைஞ்சல் பண்ணும். ஆனால் தயிர் நன்கு செரிமானமாகும். ஆறாம் மாதத்தில் சிறிதளவு பருப்பு, ரசம் சேர்த்துச் சாதம் தரலாம். இப்போது சாதத்துடன் சிறிதளவு புளிப்பில்லாத தயிர் சேர்க்கலாம். கொஞ்சம் திட உணவு கொஞ்சம் திரவ உணவு என்று மாற்றி மாற்றித் தருவது நல்லது. சாதம் என்பது நான்கு ஸ்பூன் அளவு போதுமானது.







ஏழாம் மாதம் வாக்கில் சொட்டு நெய் சேர்க்கலாம். ஏழு மாதத்துக்குள் குழந்தைக்கு எல்லா உணவுகளின் சுவையையும் பழக்கி விட வேண்டும். இல்லாவிட்டால் வளர்ந்த பிறகு சாப்பிடவே அடம்பிடிக்கும் மனநிலை குழந்தைகளிடம் உண்டாகி விடும்.

எந்த உணவாக இருந்தாலும் அரை ஸ்பூன் அளவில்தான் தொடங்கிப் படிப்படியாகக் கூட்ட வேண்டும்.

## குழந்தையின் எடை

குழந்தையின் ஆரோக்கியமான வளர்ச்சியைக் காட்டுவது அதன் எடைதான். பிறந்து நாற்பது நாட்களில் 2.8 கிலோ இருந்தால் நான்கு மாதம் வரை தினமும் இருபது கிராம் அளவில் எடை கூடும். இதற்கு டாக்டர்கள் கணக்கு வைத்திருக்கிறார்கள்.

குழந்தைக்கு இரண்டு மாதம் வரை இரண்டு மூன்று முறையும் அப்புறம் ஓர் ஆண்டு முடியும் வரை மாதம் ஒருமுறையும் கண்டிப்பாய் டாக்டரைச் சந்தித்து ஆலோசனை பெற வேண்டும். இந்தக் காலத்தில் குழந்தையின் வளர்ச்சியைக் கவனித்து உரிய தடுப்பு ஊசிகள் போடவும் இந்தச் சந்திப்பு உதவும்.

எக் காரணம் கொண்டும் தடுப்பூசிகள் போடுவதை ஒத்தி வைக்கவோ தவிர்க்கவோ கூடாது.

## கழிப்பறை ஒழுங்கைக் கற்றுக் கொடுங்கள்

பிளாஸ்டிக் பொருள்களால் ஆன 'செல்ஃப் ரீடெய்னிங் நாப்கின்' போன்றவற்றைச் சிலர் பயன்படுத்துகிறார்கள். குழந்தைக்கு இதை அணிவித்து விட்டு இரண்டு மணி மூன்று மணி என்று கவனிக்காமல் போய் விடுவார்கள். இந்தக் காலத்தில் குழந்தையின் அசுத்தம் அப்படியே அந்த நாப்கினில் படிந்து ஆரோக்கியக் கேட்டை உண்டுபண்ணுகிறது. இம்முறை அறவே தவிர்க்கப்பட வேண்டும்.

பல தாய்மார்கள் குழந்தைக்குக் கழிப்பறைப் பயிற்சியே தருவதில்லை. நின்று கொண்டே மலம் கழித்து வேதனைப்படுவது, கண்ட கண்ட இடங்களில் சிறுநீர் கழிக்க அனுமதிப்பது எல்லாம் 'முளை'யிலேயே மாற்றக்கூடியவைதாம். குழந்தையை அவ்வப்போது பாத்ரூமுக்கு அழைத்துப் போய்ச் சிறுநீர் கழிக்கச் செய்யப் பழக்க வேண்டும். ஒவ்வொரு முறையும் தண்ணீரால் சுத்தம் செய்து ஈரம் இல்லாமல் துடைத்து விட வேண்டும்.

புட்டிப் பால் தரும் போது பயன்படுத்தப்படும் ரப்பர் நிப்பிள்தான் பல நேரங்களில் நோய்த் தொற்று ஏற்பட முதல் குற்றவாளியாக அமைந்து விடுகிறது.



உட்கார்ந்த நிலையில் மலம் கழிக்கும் பயிற்சியை ஆறேழு மாதங்களிலேயே கற்பித்து விடலாம். சில தாய்மார்கள் தம் கால்களில் குழந்தையை உட்கார்த்தி வைத்துப் பழக்குவார்கள். இவ்வாறு உட்கார்ந்த நிலையில் குழந்தை பழகி விட்டால் பின்னால் மலச்சிக்கல், அது தொடர்பான உபாதைகள் ஏற்படாமல் தடுத்து விடலாம்.

## குளியல் முறைகள்

பிறந்த குழந்தை நன்கு அழுத பிறகு நல்ல 'பிங்க்' நிறம் வந்ததும் நீராட்ட வேண்டும். 'பனிக்குட' அசுத்தங்கள் போவதற்காக திரவ பாரஃபின் உபயோகித்து நீராட்டுவார்கள்.

எப்போதுமே இளஞ்சூடான நீரில்தான் குழந்தைகளைக் குளிக்கப் பண்ண வேண்டும். நல்ல 'கொதி' நீரில் குளிப்பாட்டினால் குழந்தை சிவப்பு நிறமாக இருக்கும் என்று ஒரு தவறான நம்பிக்கை சில தாய்மார்களிடம் உண்டு. நிறம் என்பது இயற்கையாய் அமைவது. அதை இப்படி நீராட்டுவதால் மாற்ற முடியாது.



நீராட்டும் போது பயத்த மாவு போன்றவற்றைப் பயன்படுத்துவதில் தவறில்லை. முதலில் பாதத்தை நனைத்து அப்புறம் முழங்கால், இடுப்பு, மார்பு என்று மேல் நோக்கியே வந்து கடைசியில்தான் தலையில் தண்ணீர் விட வேண்டும். எடுத்த எடுப்பில் தலைக்குத் தண்ணீர் விடுவது குழந்தைக்கு மூச்சுத் திணறலை உண்டாக்கும்.

கழுத்துக்குக் கீழே தினமும் சிறிதளவு எண்ணெய் தேய்த்து நீராட்ட வேண்டும். வாரம் இரண்டு முறை குழந்தைக்குத் தலைக்கு நீர் விடலாம். சோப் அல்லது ஷாம்பூ பயன்படுத்தலாம். தலைக்கு எண்ணெய் தேவையில்லை. எண்ணெய் தேய்ப்பதால் குழந்தைக்குச் சளி பிடிக்கும் தொந்தரவுகள் ஏற்படலாம். ''உச்சி''யில் சிறிதளவு எண்ணெய் வைக்கலாம். இதுவும் மிக அவசியம் என்பதில்லை. தலையில் எண்ணெய்ப் பசை இருப்பதால் FUNGUS தொற்றிக் கொண்டு, தலைமயிர் கொட்டை விழுதல், சடை போடுதல் போன்றவை ஏற்படுகின்றன.

கண் காது போன்ற உறுப்புக்களில் எண்ணெயிடுவது நல்லதல்ல. நோய்த் தொற்று (Infection) ஏற்பட இது காரணமாகி விடும். அதே போல் மூக்கில் எண்ணெய் இடுவதும் ஆபத்தானது. 'லிபிட் நிமோனியா' என்னும் நோய் உண்டாக இது வழிவகுக்கும்.

குழந்தையை நீராட்டும் போது எந்தக் கிருமிநாசினித் திரவத்தையும் சேர்க்கக் கூடாது. மூக்கில் துணியைத் திரித்து நுழைத்துத் தும்மச் செய்வது, காதில் 'Buds' போன்றவற்றால் குடைந்து அழுக்கெடுப்பது போன்றவை குழந்தைக்கு ஊறு விளைவிக்கக் கூடியவை. சொல்லப் போனால் குழந்தைகளின் காதில் மெழுகு போன்ற அழுக்குப் பசை இருப்பது நல்லதுதான். உள்ளே தூசுகள் புகுந்து விடாமல் தடுக்கும் இயற்கையின் ஏற்பாடு இது.

சாம்பிராணிப் புகை அறவே கூடாது. இது குழந்தைக்குச் சுவாசப் பாதையில் நமைச்சலை (Irritation) உண்டுபண்ணி, நுரையீரல்களைப் பலவீனப்படுத்த வாய்ப்புண்டு.

கண்ணுக்கு மையிடுவது என்பது வேண்டத்தகாத பழைய பழக்கம். இதனால் கண் இமைகளின் உட்புறம் நமைச்சல் ஏற்படுகிறது. குழந்தைகளின் நகக் கண்களில் அழுக்கு சேர்ந்து விட வாய்ப்பு அதிகம். எனவே அவ்வப்போது 'படுஜாக்கிரதையாக' நகங்களை வெட்டிவிட வேண்டும். சிறிய கத்திரிக்கோல் அல்லது நகம் வெட்டியைக் கொண்டு பிஞ்சு விரலில் காயம்பட்டு விடாமல் மிகவும் கவனமாய் நகம் வெட்ட வேண்டும்.

குழந்தைக்கு நீராட்டியபின் பவுடர் போடும் போது பிறப்பு உறுப்புக்களில் அதிகமாகப் பவுடர் போடுகிறார்கள். இது மிகவும் தவறான பழக்கம். குறிப்பாகப் பெண் குழந்தைகளுக்கு இப்படி மிகை

யாகப் பவுடர் போடுவது நீர்த்தாரையின் பாதையை அடைத்து நோய்த் தொற்றுக்கும் வழிவகுக்கும்.

## மொட்டையின் மகிமை

குழந்தைகளுக்கு மூன்றாம் மாதத்திலேயே மொட்டையடிக்கலாம். பொடுகு, பேன் போன்றவை அணுகாமல் பாதுகாக்க இது உதவும். சாதாரணமாய்ச் சிறு குழந்தைகள் தூங்காமல் அழுது ரகளை பண்ணுவதற்குத் தலைமயிரில் 'குடி'யேறும் இது போன்ற நுண்கிருமிகளே காரணமாகின்றன.

## துணிகளின்தூய்மை

குழந்தைகளுக்குப் பயன்படுத்தும் 'நாப்கின்' துணியைக் கிருமி நாசினிகளில் நனைக்கக் கூடாது. சாதாரண சோப்புக்களே போதும். கிருமி நாசினிகள் குழந்தையின் பூப் போன்ற உடல்வாகுக்கு ஏற்றவையல்ல. தமைச்சலை ஏற்படுத்தி அமைதியிழக்கப் பண்ணும்.

கதர் போன்ற மிருதுவான காற்றோட்டமான ஆடைகளே குழந்தைக்கு நல்லது. நைலான் வகைகளும் மைக்காப் பொட்டுக்கள் அச்சிட்ட துணி வகைகளும் ஏற்றவையல்ல.

காற்றோட்டமான சூழலில், அதிகம் துணியில்லாமல் பராமரிப்பது நல்லது.

பொதுவாகவே 'BE CLEAN, NOT VERY CLEAN' என்பதை ஒரு வழிகாட்டு நெறியாக வைத்துக் குழந்தையைக் கவனிப்பது உகந்ததாகும்.

## அன்பே உரமாகும்

குழந்தையின் உடலியல் தொடர்பான பசி, தாகம், உறக்கம் போன்ற தேவைகளை நிறைவு செய்தால் மட்டும் போதுமானதல்ல. கூடவே அதன் உளவியல் தொடர்பான தேவைகளையும் அவசியம் கவனிக்க வேண்டும்.

எல்லாவற்றுக்கும் அடிப்படையாக அன்பைப் பொழிவது ஒன்றே குழந்தை வளர்ப்பிலும், அதன் விளைவான சமுதாய உயர்விலும் ஆரோக்கியத்தை உருவாக்க முடியும்.

சிறு குழந்தைகள் பெற்ற தாயின் கவனிப்பிலேயே விடப்பட வேண்டும். ஆயாக்கள் வைத்துக் குழந்தைகளைப் பராமரிப்பது அவர்களின் ஆரோக்கியமான வளர்ச்சியைக் கட்டாயம் பாதிக்கும்.

ஆனால் தாய் - குழந்தை நெருக்கம் கூட இப்போதெல்லாம் அரிதாகி விடும் ஆபத்து பெருகி வருகிறது. சில உளவியலாரின் கருத்துப்படி சிறு குழந்தை தனக்குப் பாலூட்டும் தாயின் மனநிலையைக் கூடப் புரிந்து கொள்ளுமாம். 'Bad nipple - Good nipple' என்று மன மாறுபாடுகளைப் புரிந்து கொள்கிற அறிவுக் கூர்மை ஆரம்பத்திலேயே குழந்தைகளுக்கு உண்டு என்கிறார்கள். எனவே பாலூட்டும் போது கூடப் பாசத்தோடும், பரிவோடும், ஆத்திர உணர்வு



சற்றும் வெளிப்படாமலும் கவனிக்க வேண்டியது தாயின் கடமை.

பொருளாதாரக் காரணங்களாலும், தாயின் மீது மாமியார், நாத்தனார் போன்ற நெருக்கமான உறவினர்கள் காட்டுகிற வெறுப்பு - விரோதங்களாலும் குழந்தையின் மன ஆரோக்கியம் பாதிக்கப்படும். நாகரிக வளர்ச்சி, படிப்பறிவு இவற்றால் இந்த 'மருமகள் விரோதம்' என்னும் கொடுமை வெகுவே குறைந்து விட்டது. இருப்பினும் ''ஆண் குழந்தை'' என்னும் கவர்ச்சியும் 'பெண் குழந்தைதானே' என்ற பாரபட்சமும் நிறையவே இருக்கின்றன.... இதனால் மிக ஆழமான மனவியல் பாதிப்புகள் உண்டாகும். குழந்தையின் ஆளுமை வளர்ச்சி (personality development) மிகவும் அவதியுறும்.

முதல் குழந்தை, அடுத்த குழந்தை என்று எண்ணிக்கை அதிகமாகும் போது,

தாயின் அன்பும் பரிவும் பகிர்ந்து அளிக்கப்படுகின்றன. இதனால் முதல் குழந்தை அடுத்த குழந்தையின் மீது பொறாமை கொள்ளும் நிலை உருவாகிறது. தாய் கண்டிப்பதை விட்டுக் கனிவை அதிகரிப்பதன் மூலமே இந்த இடைவெளியைக் குறைக்க முடியும். அதுபோலவே குழந்தை கறுப்பு என்று முகம் சுளிப்பதும் கூட ஆரோக்கியமற்ற நிலையை வளர்க்கும்.

குழந்தையின் வளர்ச்சி வேகத்துக்கு ஈடு கொடுத்துத் துணை நிற்பதில் பொம்மைகளின் பங்கு அதிகம். பழங்காலத்துத் 'திருப்பதி மரப்பாச்சி' என்னும் மரப்பாவைகளை உயிருள்ள குழந்தையாகவே எண்ணி சோறூட்டித் தாலாட்டி மகிழும் குழந்தைகளைச் சற்றே கவனிப்பது கூட சுவாரஸ்யமான அனுபவம் தான்.

சின்னக் குழந்தைகள் எல்லாவற்றையுமே பிறர் செய்யும் போது கூர்மையாகக் கவனித்து அவற்றைத் தாமும் 'இமிடேட்' செய்கின்றன. இப்படியே ஒவ்வொன்றையும் அவை கற்றுக் கொள்கின்றன.

அப்பாவோ, அண்ணனோ காப்பி சாப்பிடும் போது அவர்கள் தம்ளரில் ஊற்றி ஆற்றுவதைக் கவனிக்கும் குழந்தை, தானும் அப்படிச் செய்ய முயல்கிறது. இருபதில் ஒரு பங்கைக் கூடக் குழந்தையால் அப்படி ஊற்ற முடியாமல் போகலாம். முழுவதையும் கூடக் கொட்டிக் கவிழ்த்து விடலாம். அப்போது குழந்தையைக் கண்டிப்பதோ கடிந்து கொள்வதோ நல்ல வளர்ப்பு முறை அல்ல. மாறாக "வெரி குட்...! அப்படித்தான் ஆனா இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாக" என்று சொல்லி அதை அந்த முயற்சியில் ஊக்கப்படுத்த வேண்டும். இப்படிப் பாராட்டுவதைத்தான் அந்தப் பிஞ்சு மனம் வரவேற்று மகிழ்கிறது. கண்டிப்பதும் மிரட்டுவதும் அந்த மலரை வாடப் பண்ணி விடும்.









தாயோ பாட்டியோ செய்வதைப் பார்த்துத் தானே ஒரு துணியை எடுத்துச் சிறுநீர் கழித்த இடத்தைத் துடைக்க முன்வரலாம். அல்லது எதையாவது புத்தகத்தில், காகிதத்தில் கிறுக்கிக் கொண்டு வந்து காட்டும். அப்போது தட்டிக் கொடுத்துப் பாராட்ட வேண்டும்.

செடி வளரும் போது பக்கங்களில் வெட்டி விட்டு 'ட்ரிம்' செய்வது போல், குழந்தையின் ஒவ்வொரு இயக்கத்தையும் கவனித்து அவற்றை நல்ல முறையில் திருப்பி விட்டாலே போதுமானது.

சுவரில் கிறுக்குகிறதே என்று கோபப்படாதீர்கள். அது கிறுக்கி மகிழ்வதற்காக ஒரு குறிப்பிட்ட இடத்தை ஒதுக்கிக் கொடுத்து, அல்லது ஒரு காகிதத்தை ஒட்டி வழி செய்து கொடுங்கள். இப்படிச் செய்து பழக்குவது வளரும் குழந்தைகளிடம் கட்டுப்பாட்டு ஒழுங்கை வளர்க்கும்.

'ஐந்தில் வளையாதது' என்று ஒரு பழமொழி சொல்வார்கள். நெருக்கம், சிறு வெற்றிகள், சுயச்சார்பு என்று மூன்று நிலைகளில் குழந்தைகளின் சுயகௌரவம் உருவம் பெறுகிறது. இந்த அடிப்படையில் ஆளுமை, அறிவு, உடல் திறன் மூன்றும் ஒருசேர, ஐந்து வயதுக்குள் வளரும் வளர்ச்சி தான் குழந்தை பெரியவனாகி சமூகத்தை எதிர்நோக்கும் காலத்திலும், வாழ்நாள் முழுவதும் உறுதுணையாக நின்று உதவும்.

# பகவானை நாடுவதற்கு சில நற்காரணங்கள்



ஸ்ரீ பகவான்
கட் பீஸ் ஜங்ஷன்

21, பாண்டி பஜார், தி.நகர், சென்னை-17.
போன்: 445777, 443642.

123, வாலாஜா ரோடு, சென்னை-2.
போன்: 846966.

எங்களின் ஜூவெல்லரி ஷோரூம்:

நியூ
ஸ்ரீ பகவான்
தங்க மாளிகை
(பி) லிட்.

63, பாண்டி பஜார், சென்னை - 17.
போன்: 445002, 445003.

பகவான் கட்பீஸ். உங்களின் ஷூட்டிங் சர்டிங் மற்றும், பல்வகை துணிகளுக்கும் நாடுவீர் பகவானை! கண்கவர் வண்ணங்கள். பரவசமூட்டும் துணி வகைகள். அனைத்திற்கும் பகவான்.

ஏஜெண்ட்களோ, இடைத் தரகர்களோ, இல்லாமல் விமல், ரேமாண்ட், குவாலியர் மற்றும் பெரிய மில்களில் இருந்து நேரடி. கொள்முதலால் உண்மையான விலை மலிவு. இவைபோக தள்ளுபடியும் கூட. ஆகையால் பகவான் உங்களின் நல்ல தேர்வு மட்டுமல்ல, சிக்கனமானதும் கூட.

உங்கள் வாழ்வின் வசந்த காலத்திற்கு எங்களின் நகைப் பிரிவில் சீரிய தங்க ஆபரணங்களின் அணிவரிசை. எங்களின் ஏதாவதொரு சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து ஒரு தங்க புதையலை உமதாக்குவீர்!.

துணிகளுக்கு




தள்ளுபடியும் உண்டு.

ஞாயிறும் கடை உண்டு.

அம்மா, அப்பா, அண்ணன், அக்கா, தாத்தா, பாட்டி, பக்கத்து வீட்டார், பள்ளி ஆசிரியை என்று நெருக்கமான வட்டாரத்தில் பழகுகிற குழந்தை மிகவும் நேசிக்கப்பட வேண்டும். 'தாத்தா' என்று வந்து காலைக் கட்டிக் கொள்ளும் போது உச்சிமுகர்ந்து அதை எடுத்து அரவணைக்க வேண்டும். சில குழந்தைகள் பள்ளிக்கூடம், ஆசிரியை என்றாலே நடுங்கி வாய் மூடும். இது நெருக்கத்தை வளர்க்க உதவாது.

சிறு சிறு வேலைகள் தந்து - குழந்தைகளின் சுயச்சார்புக்கு உரமிட வேண்டும்.

## விசேஷ உதவி

## கோரும் குழந்தைகள்

குழந்தையின் மூளை வளர்ச்சியில் 80 சதவிகிதம் அது தாயின் வயிற்றில் வளரும் போதே நிறைவேறி விடுகிறது. தாயின் உடல் வளர்ச்சிக்கு ஊட்டச்சத்து போதுமான அளவு கிடைக்கா விட்டால், அது குழந்தையின் மூளை வளர்ச்சியைப் பாதிக்கவே செய்யும்.

தட்டம்மை போன்ற நோய்கள் தாய்க்கு ஏற்பட்டால் குழந்தையின் அறிவு வளர்ச்சி பாதிக்கப்படலாம். அதே போல் பேறு காலத்தின் கடைசி மூன்று மாதங்களில் பால்வினை நோய்த் தொடர்பு ஏற்படக் கூடுமானாலும் அது குழந்தையின் மூளை வளர்ச்சியைப் பாதிக்கும்.

தமிழகத்தில் நூறு மனநோய்க் குழந்தைகளை எடுத்துக் கொண்டால் இருபத்தைந்து குழந்தைகள் காச நோய், மூளைக் காய்ச்சல் இவற்றின் விளைவால் பாதிக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள்.

குழந்தை பிறந்து ஆறு மாதங்களுக்குள் மனவளர்ச்சி



யின்மையுட்பட எல்லாக் குறைபாடுகளையும் புரிந்து கொண்டு குணப்படுத்த முயற்சி எடுக்கலாம். Infant Stimulation Centre என்று அமைப்புக்கள் உள்ளன. குறைபாடுடைய குழந்தைகளை இந்த அமைப்புக்களின் மூலம் சீராக்கலாம்.

குழந்தைக்குக் குறைபாடு இருக்கிறது என்பதைக் கவனமாகக் கண்டறிவதும் அதை ஒப்புக் கொண்டு உடனே மருத்துவ உதவி பெறுவதும் அவசியம். சாதாரணமாக, ஒவ்வொரு வளர்ச்சிக் கட்டத்திலும் குழந்தை புதிதாகச் சில செயல்களைச் செய்யும். இவ்வாறு செய்யாத குழந்தைகளை அனுபவசாலிகள் சுலபமாக அடையாளம் கண்டு கொள்ளலாம்.

## கருணையுடன்

## புறக்கணியுங்கள்!

குழந்தையைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்வது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் அதனை அவ்வப்போது தனியே, தானாக விளையாட விடுவதும்... இதனை Benign neglect என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். (Benign - கருணையுடன் neglect புறக்கணித்தல்).

எப்போதுமே குழந்தையுடன் இருந்து கொண்டு நமது கண்காணிப்புப் போர்வையால் அதைத் திணறத் திணறப் போர்த்துவதும் நமது ஆளுமையின் நிழலிலேயே அது வளர வேண்டும் என்று எதிர்பார்ப்பதும் நியாயமல்ல. உங்கள் குழந்தையேயானாலும் அது சுதந்திர சிந்தனையுள்ள இன்னொரு மனிதப் பிறவியே என்பதை ஒப்புக் கொள்ளுங்கள்.... அப்போது உணர்வீர்கள் - அதன் ஒவ்வொரு செயலும் அதன் மனத்தின் வெளிப்பாடு; அதன் சின்னச் சின்ன குறும்புகள் அதன் கற்பனையின் முத்திரை!

இந்த இலவச இணைப்புக்காகப் பேட்டி தந்து உதவியவர்கள் :

* டாக்டர் விஸ்வநாத்

* டாக்டர் ஜெயந்தி வியாஸ்

* பேராசிரியர் ஜெயசந்திரன் (முதல்வர் - பாலவிஹார்)







தொகுப்பு : பாலன் பூங்குழலி, சுப்ரபாலன்

சித்திரங்கள் : நடனம்



# தலைவர் வருகை

ஊரில் பெரிய மளிகைக் கடையில்தான் நான் எப்போதும் மாதத் தேவைக்கான சாமான்களை வாங்குவது வழக்கம்.

அன்றும் அப்படித்தான் லிஸ்டைக் கொடுத்து விட்டுக் காத்திருந்தேன்.

நேற்று சம்பளப் பட்டுவாடா நாளாதலால் இன்று கடையில் ஏகமாகக் கூட்டம்.

அப்போது... மூன்று இளைஞர்கள்... உள்ளூர் இலக்கிய மன்றத்தைச் சேர்ந்தவர்கள்... கையில் அழைப்பிதழ்களும், ஒரு நோட்டுப் புத்தகமுமாக, கல்லாவில் அமர்ந்திருந்த கடை முதலாளியை நெருங்கினார்கள்.

இளைஞர்களில் ஒருவன் முதலாளியிடம் ஓர் அழைப்பிதழை எடுத்து இரு கைகளாலும் நீட்டினான்.

''வரும் சுதந்திர தினத் தன்னிக்கி நம்ம ஊர்ல முதல் மார்க் வாங்கின பிளஸ் டூ மாணவ மாணவிகளுக்குப் பரிசு கொடுத்துப் பாராட்டு நடத்தறோம் சார். அதோட.... தியாகி பொன்னப்பருக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டி கௌரவிக்கிறோம்'' என்றான், அழைப்பிதழைக் கொடுத்த இளைஞன்.

''ம்.. ம்... செய்ய வேண்டியதுதான்'' என்ற முதலாளியின் குரலில் எந்தவித உற்சாகமுமில்லை.

அவர் விழிகள் மேஜை மேல் கணக்குப் பிள்ளை சரிபார்த்து வைத்த பில்லையும், ரூபாய் நோட்டையுமே பார்க்க, அவர் கை ரூபாய் நோட்டை எடுத்துக் கல்லாவுக்குள் போட்டு விட்டு, மீதித் தொகையை எண்ணி, பில்லில் ஒரு டிக் செய்து கணக்குப் பிள்ளையிடம் நீட்டியது.

''நம்ம தாலுக்கா லெவல்ல பள்ளி மாணவ மாணவிகளுக்கு ஒரு கட்டுரைப் போட்டியும் பேச்சுப் போட்டியும் நடத்திப் பரிசு கொடுக்கிறோம் சார்'' என்றான் இன்னொரு இளைஞன்.

''அதெல்லாம் சரிதான். ஒரே கூட்டமா இருக்கு. இந்த நேரத்துல வந்திருக்கீங்களே,'' என்றார் முதலாளி.

அப்போது போன் மணி அடித்தது. எடுத்துப் பேச ஆரம்பித்தார்.

அவர் எப்போது பேசி முடிப்பார், என்ற தவிப்போடு நின்றிருந்தனர் விழா ஏற்பாட்டு இளைஞர்கள்.

ஒருவழியாக ரிசீவரை வைத்து விட்டு நிமிர்ந்த முதலாளி, ''சரி நோட்டைக் கொடுங்க தம்பி. வந்துட்டீங்க. உங்களையெல்லாம் வெறுங்கையோட அனுப்பக் கூடாது. இப்பல்லாம் தொழில் நடத்தறதே ரொம்ப சிரமமா இருக்கு. அந்த டாக்ஸ் இந்த டாக்ஸ்னு முழி பிதுங்குது'' என்றவரிடம், நன்கொடை நோட்டைத் திறந்து நீட்டினான் அந்த இளைஞன்.

டாக்ஸைப் பற்றி அங்கலாய்க்கிற முதலாளி, சரிபார்த்து மீதித் தொகை கொடுத்த பில்கள் பெரும்பாலும் வெள்ளைத் தாள்கள்தான் என்பதைக் கண்ணுற்ற எனக்கு மனசுக்குள் கறுகறுவென்றது.

**ராஜகுரு**

எனக்கே டம்மி பில்தான் போட்டார் கணக்குப் பிள்ளை.

ரொம்ப பெரிய தொகையை வாரி வழங்குவது போல பத்து ரூபாய் எழுதி ஒரு பழைய ரூபா நோட்டையும் எடுத்து அந்த இளைஞர்களிடம் நீட்டினார்.

''நீங்கள்லாம் இப்படி குறைவா கொடுத்தா... சின்னக் கடைக்காரங்கள்லாம் எப்படி சார் தருவாங்க? கொஞ்சம் சேர்த்து எழுதுங்க சார்'' - கோரசாகக் கெஞ்சினார்கள் இளைஞர்கள். பார்க்க எனக்குப் பரிதாபமாக இருந்தது.

''ஒங்கள மாதிரி ஒரு நாளைக்கு பல பேர் வராங்க தம்பி. புள்ளையார் சதுர்த்தி, கும்பாபிஷேகம், காவடி ஆட்டம், கரகாட்டம், பொதுக்கூட்டம், மகாநாடுன்னு என்னென்னமோ பேர்ல ஒரு நோட்டைச எடுத்திட்டு வந்திர்றாங்க. எல்லாத்துக்கும் குடுக்க வேண்டியிருக்கு. ஏன்டா கடையைத் திறக்கறோம்னு இருக்கு. இதெல்லாம் பரவாயில்லேங்கற மாதிரி கவர்மென்டு சம்பளக்காரங்கள்லாம் தீபாவளி இனாமுக்கு நோட்டைத் தூக்கிக்கிட்டு கும்பல் கும்பலா வராங்க. எத்தனையோ கஷ்டங்கள்'' என்ற முதலாளி, அந்தக் குட்டிப் பிரசங்கத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு,

''ஏய் கணேசா! அந்தக் காட்டூர் பில்லுக்குப் போட்டாச்சா...?'' என அதட்டலாகப் பொரிய ஆரம்பித்தார்.

இனி இவரிடம் சல்லிக்காசு கூட பெயராது என்பதை உணர்ந்த இளைஞர்கள் கடையை விட்டு நகர்ந்தவர்.

அப்போது... கடையின் முன் ஒரு வெள்ளை அம்பாசிடர் வந்து நின்றது. பளீர் உடையும் பாந்தமான துண்டும் அணிந்த நான்கைந்து பேர் 'படீர்' 'படீர்' எனக் கார்க் கதவை அறைந்து சார்த்தி விட்டுக் கடைக்குள் வந்தவர்.

பிரமுகர்கள் கல்லாவை நெருங்குவதற்கு முன்பே, ''வாங்க வாங்க. வாங்கண்ணே!'' என்று கைகூப்பிய முதலாளி, ''ஏய்! நாற்காலி கொண்டா'' என்றார், உட்பக்கம் திரும்பி.

''என்ன சாப்டறீங்க? கூல்டிரிங்சா? காப்பியா?''

''அதெல்லாம் இருக்கட்டும் ஒண்ணும் வேணாம். எங்களுக்கு நேரமில்ல'' என்று மாவட்டத்தின் முக்கிய புள்ளி அவசரப்பட்டார். ''நாங்க சொல்ல வந்தது என்னன்னா... இன்னிக்குத்தான் மெசேஜ் வந்திச்சி. தலைவர் நம்ம மாவட்டத்துக்கு வராங்க. ரெண்டு நாள்தான் அவகாசம் இருக்கு. எங்களுக்குக் கையும் ஓடலை. காலும் ஓடலை. மளமளன்னு காரியம் பார்க்க வேண்டியிருக்கு. துளி சரியா இல்லன்னாலும் போச்சு.''

''ச்சச்ச. அடடா! ம். சொல்லுங்க.''

''நாம ஒரு பெரிய வரவேற்பும், பிரம்மாண்டமான... மாநாடு போல ஒரு கூட்டத்தை நடத்திக் காட்டணும். அதோட ஒரு பெருந்தொகையைக் கட்சி நிதியா கொடுக்கறோம்.''

''ம். ம். அது சரி. செய்யணும். செய்யணும்.''

அவர் கடை நம்பர் ஒன் கல்கண்டை விட இனிப்பாக இருந்தது முதலாளியின் ஆமோதிப்பு!

''உங்க கணக்குக்கு ஒரு பத்தாயிரம் வெச்சோம். மாவட்டம்தான் அஞ்சாயிரம் போதுன்னாங்க. சரின்னு அண்ணன் சொல்படியே வச்சுக்குவோம்னேன்.''

மாங்கோ ஜூஸ் வந்தது. அருந்தி, துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டனர் பிரமுகர்கள்.

முதலாளி விடுவிடுவென ஐம்பது நூறு ரூபாய் நோட்டுக்களை எண்ணி எடுத்து மாவட்டத்திடம் இரு கைகளாலும் கொடுத்தார்.

''ரொம்ப நன்றி. இன்னும் ஒரு முக்கியமான விஷயம். ஒங்க கடைக்கு முன்னால ஒரு வரவேற்பு வளைவு போட்டுடுங்க. சீரியல் செட்டெல்லாம் போட்டு தூள் கௌப்பணும். என்ன? ஒவ்வொரு தெரு முனையிலயும் ஒண்ணு போட்டாகணும். பின்னால ஒங்க நல்லதுக்குத்தான் இதைச் சொல்றேன்.''

''அடடே! போட்டுட்டா போச்சு. நீங்க சொல்லும் போது இது கூட செய்யாம இருப்பேனாண்ணே!''

விடைபெற்ற அவர்களின் அம்பாசிடர் கிளம்பிச் செல்லும் வரை நின்றிருந்தார் முதலாளி.

அவர் கடையில் விற்கும் சரக்குகளுக்குப் பலவித தரம் இருப்பதைப் போலவே, நன்கொடை அளிப்பதிலும் பல்வேறு தர நிர்ணயத்தை அவர் கையாள்வதை எண்ணி எனக்கு வியப்பும் மனச்சோர்வும் எழுந்தன.



பத்திரிகை ஆசிரியர் : உங்க கதையிலே அஸ்திவாரம் ஸ்டிராங்கா இல்லியே?

எழுத்தாளர் : காண்ட்ராக்டர் பற்றின கதையாச்சே அப்படித்தான் இருக்கும்!

- கு. அருணாசலம்.

அன்று

இன்று

நான் அப்படித்தான் இருந்தேன். உண்ண
உணவில்லாமல், உடையில்லாமல், அனாதையாய்
இருந்தபோது எடுத்து என்னை காப்பாற்றியது
உதவும் கரங்கள்தான். இன்று நான் சந்தோஷமாக
இருக்கிறேன் "உங்கள்" உதவியால்....!

— கிருஷ்ணன் வயது 5

உங்கள் உதவி என்று கிருஷ்ணன் குறிப்பிடக் காரணம் "உதவும் கரங்கள்" பராமரித்து வரும் 400 ஆதரவற்றவர்களுக்கும் அரசு உதவியோ, நிரந்தர நிதி உதவியோ இல்லை. உங்கள் உதவி தான், இவர்களின் எதிர் காலத்தை நிர்ணயிக்கும்.

இவர்களுக்கு உங்கள் உதவியாய்...

■ பழைய துணிகள், புத்தகங்கள், மீதமான உணவு, மருந்துகள் ஆகியவை அளித்து உதவலாம்.
■ செக்/டி.டி./எம்.ஓ/மூலம் பணம் அனுப்பலாம்.



எஸ். வித்யாகர்

**உதவும் கரங்கள்**

460, என்.எஸ்.கே. நகர், சென்னை-600 106.
Ph: 426141, 4830321.

# சிவகாமியின் சபதம்

## முன்கதைச் சுருக்கம் :

கி. பி. ஏழாம் நூற்றாண்டில், தென் னாட்டுத் தொண்டை மண்டலத்தில், காஞ்சி மாநகரைத் தலைநகராகக் கொண்டு அர சாண்டனர் பல்லவ மன்னர்கள். அவர்களுள் மிகப் பிரசித்தமானவர் மகேந்திர பல்லவர். கலை ஆர்வலர், மாவீரர், ராஜதந்திரி - இதே இயல்புகள் இவர் மகன் மாமல்ல நரசிம்மவர்மரிடமும் இருந் தன.

ஆயனர் சிற்பியின் மகளான நடனக் கலை ராணி சிவகாமியை நரசிம்மவர்மர் காதலித்தார். அவளும் அவர்பால் காதல் கொண்டிருந்தாள். நாட்டின் நலன் கருதி காதலுக்குத் தடைவிதிக்க முயன்றார் மகேந்திர பல்லவர். அம் முயற்சியில் தோற்றார்.

வடக்கே வாதாபியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சளுக்க மன்னன் புலிகேசி, பல்லவ நாட்டின் மீது படையெடுத்து வந்தான். காஞ்சியை முற்றுகையிட்டும் பயனில்லை. அந் நகரைக் கைப்பற்ற முடியாமல் சமாதான உடன் படிக்கை செய்து கொண்டான்.

ஆனால் வாதாபிக்குத் திரும்புகையில் பல்லவ ராஜ்யத்தில் அனேகம் சேதங்களை விளை வித்து, பல்லாயிரம் பிரஜைகளைக் கைப்பற்றிச் சென்றான். சிவகாமியும் அவனால் அபகரிக்கப் பட்டாள்.

புலிகேசியின் அண்ணன் நீலகேசி. இவர் நாகநந்தி என்னும் பெயர் ஏற்று புத்த பிக்ஷுவாக மாறி பல்லவ நாட்டில் ஒற்றாடிய போது சிவகாமி யின் பேரில் காதல் கொண்டார்.

எனவே புலிகேசியால் கைப்பற்றிச் செல்லப் பட்ட சிவகாமியைச் சளுக்க நாட்டில் பாதுகாப் பாக வைத்திருக்க ஏற்பாடு செய்தார். ஆனால் அவர் ஊரில் இல்லாத சமயம் சிவகாமியை நாற்சந்திகளில் நடனமாட வைத்து அவமானப் படுத்தினான் புலிகேசி.

சிவகாமி, தன் காதலர் மாமல்லர் படை திரட்டி வந்து வாதாபியைத் தீக்கிரையாக்கித் தன்னை மீட்டுச் செல்லும் வரை அங்கிருந்து புறப்படுவதில்லை எனச் சபதம் செய்தாள்.

சிவகாமியின் சபதம் பற்றி பல்லவ ஒற் றர்கள் மூலம் அறிந்தார் மாமல்ல நரசிம்மர். தந்தை யின் அந்திமகாலக் கட்டளைக்குப் பணிந்து பாண்டிய இளவரசியை மணந்திருந்தார். ஒன்பது வருஷங்கள் ஆயத்தம் செய்து சளுக்க சாம் ராஜ்யத்தின் மீது படையெடுத்தார். அச் சமயம் வாதாபிக்கு வடக்கே அஜந்தாவுக்குச் சென் றிருந்தான் புலிகேசி. படையெடுப்பு பற்றி அறிந்து விரைந்து திரும்பினான். வாதாபிக்கு அவன் வந்துசேருமுன்னரே சேனாதிபதி பரஞ் சோதியின் தலைமையில் பல்லவ சேனை அவ னுடன் மோதி பெரும் வெற்றி அடைந்தது. தாக்கு தலைச் சற்றும் எதிர்பாராத புலிகேசி இறந்து போனான். எனினும் இது யாருக்கும் தெரியாதபடி ரகசியமாக அவன் சடலத்துக்கு எரியூட்டினார் நாகநந்தி.

இனி வாதாபி கோட்டையைத் தாக்கி அழிக்க வேண்டியதுதான் பாக்கி என்ற நிலையில் மாமல் லர் மந்திராலோசனை சபை கூட்டினார். அப்போது இலங்கை மன்னனும் மாமல்லரின் நண்பனுமான மானவன்மனைத் தவிர மற்றவர்கள் கோட்டை யைத் தாக்கி அழிக்கக் கூடாது என்றனர். காரணம்: கோட்டைக் காவல் தலைவனிடமிருந்து சமாதான ஓலை வந்திருந்ததுதான். ஆனால் சிவகாமியின் சபதத்தை நிறைவேற்றுவதில் குறியாயிருந்த மாமல்லருக்கு இந்த அபிப்பிராயம் பிடிக்க வில்லை.

அப்போது சேனாதிபதி பரஞ்சோதி, சிவகாமி அம்மையார் தமக்கு எழுதிய ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுக்க, அதைப் படித்த மாமல்லரின் கோபம் எல்லை மீறியது.

## முப்பத்துநான்காம் அத்தியாயம்

# சிவகாமியின் ஓலை

சேனாதிபதி பரஞ்சோதிக்குச் சிவகாமி அனுப்பியிருந்த ஓலையில் பின்வருமாறு எழுதியிருந்தது :

''வீர பல்லவ சைனியத்தின் சேனாதிபதியும் என் அன்புக்குரிய சகோதரருமான பரஞ்சோதியாருக்கு ஆயனர் மகள் சிவகாமி எழுதிக் கொண்டது :

''இந்த அபலையை, அநாதையை ஒன்பது வருஷ காலம் தாங்களும் பல்லவ குமாரரும் மறந்து விடாமல் நினைவு வைத்துக் கொண்டிருந்து என் சபதத்தை நிறைவேற்றி வைப்பதற்காகப் படையெடுத்து வந்திருப்பதை அறிந்து கொண்டேன். கோட்டைக்கு வடதிசையில் நடந்த பெரு யுத்தத்தைப் பற்றியும் இங்கே செய்தி வந்திருக்கிறது. அந்த யுத்தத்தில் வாதாபிச் சக்கரவர்த்தி மாண்டிருக்க வேண்டும் என்று இங்குள்ளவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள்.

''இந்த வாதாபிக் கோட்டையின் காவலரான தளபதி பீமசேனர் என்னை வந்து பார்த்து ஓலை எழுதும்படி கேட்டுக் கொண்டார். அதன்படி என் மனப்பூர்வமான சம்மதத்துடன் இதை எழுதுகிறேன்.

''தாங்களும் பல்லவ குமாரரும் எந்த நோக்கத்துடன் படையெடுத்து வந்தீர்களோ அந்த நோக்கம் நிறைவேறி விட்டது. சளுக்க சைனியமும் வாதாபிச் சக்கரவர்த்தியும் நாசமடைந்தார்கள். இத்துடன் யுத்தத்தை நிறுத்தி வாதாபிக் கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்ளும்படி ரொம்பவும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

''நான் அன்று செய்த சபதத்தைப் பல்லவகுமாரர் அதன்படியே நிறைவேற்ற வேண்டும் என்னும் விருப்பம் இப்போது எனக்கு இல்லை. அதை அப்படியே நிறைவேற்றுவதென்றால், இந்தப் பெரிய நகரத்தின் குற்றமற்ற ஜனங்கள் வீடு வாசல்களை இழந்து சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாகும்படி நேரிடும். அவர்களை அந்தக் கைய கொடுமைகளுக்கு உள்ளாக்க நான் பிரியப்படவில்லை. அவ்விதம் செய்தால் யாருக்கு என்ன பிரயோசனம்?

''ஏற்கெனவே நடந்த யுத்தத்தில் இரு தரப்பிலும் ரொம்பவும் உயிர்ச்சேதம் நேர்ந்திருப்பதாகத் தெரிகிறது. என் காரணமாக ஏற்பட்ட இந்த விபரீதப் படுகொலையை நினைத்து ரொம்பவும் வருத்தப்படுகிறேன்.

''அருமைச் சகோதரரே! கடந்த ஒன்பது வருஷ காலம் இந்த நகரத்தில் தன்னந்தனியாக நான் வசித்த போது ஓயாமல் என் மனம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. பல்லவ குமாரரும் தாங்களும் முன்னொரு தடவை வந்து என்னை அழைத்த சமயம் நான் உங்களுடன் கிளம்பி வராதது எவ்வளவு பெரும் பிசகு என்பதை உணர்ந்து கொண்டேன். என் சபதத்தை நிறைவேற்றிய பிறகு தான் இந்த நகரை விட்டுப் புறப்படுவேன் என்று பிடிவாதம் பிடித்தது எவ்வளவு அறிவீனம் என்பதை உணர்ந்து வருந்தினேன். ஆறு அறிவு படைத்த மனிதர்கள் யுத்தம் என்ற பெயரால் ஒருவரையொருவர் கொன்று கொள்வது எவ்வளவு பைத்தியக்காரச் செயல்?

''கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவன்களை மனிதர்கள் கொல்வது தெய்வ சம்மதமாகுமா? ஒரு சிறு அற்பமான உயிரைக் கூட நம்மால் சிருஷ்டிக்க முடியாமலிருக்கும் போது ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொல்வது எவ்வளவு பாபமான காரியம்? இதையெல்லாம் நினைத்துப் பார்க்கப் பார்க்க என்னால் இந்தப் பயங்கரமான பெரிய யுத்தம் வந்து விட்டதே என்று ரொம்பவும் துக்கப்படுகிறேன்.

''உலகத்தில் மனிதர்கள் குற்றம் செய்தால் அதற்குத் தண்டனையளிக்கவோ அல்லது மன்னித்து அருளவோ எல்லாம் அறிந்த இறைவன் இருக்கிறான். 'அவன் அன்றி இவ்வுலகில் ஓர் அணுவும் அசையாது' என்று பெரியோர் சொல்லுகின்றனர். அப்படியிருக்க மனிதர்கள் தங்களையொத்த மற்ற மனிதர்களின் குற்றங்களுக்குத் தண்டனை விதிக்க ஏன் முற்பட வேண்டும்?

''சகோதரரே! போனது போகட்டும். இனிமேலாவது இரத்த வெள்ளம் பெருகுவது நிற்கட்டும்.

''என்னுடைய மூடப் பிடிவாதத்தினால் உங்களுக்கெல்லாம் நான் கொடுத்த கஷ்டங்களுக்காக என்னை மன்னித்து விடுங்கள். பல்லவ குமாரரிடம் நான்

அமரர் கல்கி

ரொம்பவும் கேட்டுக் கொண்டதாகச் சொல்லி யுத்தத்தை நிறுத்தச் செய்யுங்கள்.

''கோட்டை முற்றுகை ஆரம்பமானதிலிருந்து என்னிடம் இந் நகரவாசிகள் ரொம்பவும் மரியாதை காட்டி வருகிறார்கள். பல்லவ குமாரர் கோட்டைச் சரணாகதியை ஒப்புக் கொண்டால், என்னைப் பல்லக்கிலே ஏற்றிச் சகல மரியாதைகளுடனும் வெளியே அனுப்பி வைக்கச் சித்தமாய் இருக்கிறார்கள். இதையெல்லாம் பல்லவ குமாரரிடம் தெரியப்படுத்துங்கள்.

''உங்கள் எல்லோரையும் பார்க்க வேண்டும் என்று என் உள்ளம் துடிதுடித்துக் கொண்டிருக்கிறது.

''இன்று சூரியன் மலைவாயில் இறங்குவதற்கு முன்னால் தங்களையும் பல்லவ குமாரரையும் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

''என் அருமைத் தந்தையின் பாத கமலங்களில் என்னுடைய நமஸ்காரங்களைச் சமர்ப்பிக்கிறேன்.''

மாமல்லருடைய குணப் பண்பையும் மனப்போக்கையும் நன்கு அறிந்துள்ள நாம், சிவகாமி தேவியின் மேற்படி ஓலை அவருக்கு ஏன் அத்தனை கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது என்பதை ஒருவாறு ஊகிக்கலாம்.

ஓலையைக் கிழிக்கப் போனவரிடம் சேனாதிபதி, ''அது என் ஓலை'' என்று சொன்னதும், மாமல்லரின் ஆத்திரம் இன்னும் அதிகமாயிற்று. ''அப்படியா? இதோ உமது ஓலையை எடுத்துக் கொள்ளும், சேனாதிபதி! திவ்யமாக எடுத்துக் கொள்ளும். இந்தத் தர்மோபதேச மகா மந்திர ஓலையை நீரே வைத்துக் கொண்டு பூஜை செய்யும்!'' என்று சொல்லிக் கொண்டே மாமல்லர் ஓலையை வீசி விட்டெறிந்தார்.

சேனாதிபதி அதைப் பயபக்தியுடனே பொறுக்கி எடுத்துக் கொண்டு கூறினார் : ''ஆம். பல்லவேந்திரா! இது எனக்கு மகா மந்திரோபதேச ஓலைதான். திருநாவுக்கரசர் பெருமானிடம் சிவதீட்சை பெறுவதற்காகக் காஞ்சி நகரத்துக்கு வந்தேன். அந்தப் பாக்கியம் அன்று கிடைக்கவில்லை. ஆனால், சிவகாமி தேவியிடம் உபதேசம் பெறும் பாக்கியம் இப்போது கிடைத்தது. நான் ஆசாரியராக வரித்த ஆயனச் சிற்பியாருடைய குமாரியல்லவா சிவகாமி தேவி!''

மாமல்லருடைய கோபம் இப்போது வரம்புகளையெல்லாம் கடந்து விட்டது. சிவகாமி விஷயமாக நாலு பேருக்கு முன்னால் இதுவரை பேசி அறியாதவர், இப்போது, அத்தனை பேருக்கும் முன்னால் வெட்ட வெளிச்சமாகப் பின்வரும் ஆங்கார வார்த்தைகளைக் கொட்டினார் :

''சேனாதிபதி! என் வாழ்நாளில் இரண்டு தவறுகளை நான் செய்திருக்கிறேன். சிற்பியின் மகளைச் சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க முயன்றேன். அந்த முயற்சியில் தோல்வியுற்றேன். தமிழ் ஓதவும் சிற்ப வேலை கற்கவும் வந்த உம்மைப் பல்லவ சாம்ராஜ்யத்தின் சேனாதிபதியாக்கினேன்! அதுவும் நான் செய்த பெருந் தவறு ஆயிற்று. சிற்பியின் மகள் சிம்மாசனத்துக்குத் தகுதியற்றவள் என்பதை நிரூபித்து விட்டாள். நாடி பார்க்கும் வைத்தியரின் மகன் நாடு பிடிக்கும் சேனைத் தலைவனாக யோக்கியதை அடைய முடியாது என்பதை நீர் நிரூபித்து விட்டீர்...''

சேனாதிபதி பரஞ்சோதிக்குக் கண்ணில் நீர் ததும்பிற்று. அவமானமும் ஆத்திரமும் தொண்டையை அடைக்க, தழுதழுத்த குரலில், ''பல்லவேந்திரா!...'' என்று ஏதோ சொல்வதற்கு ஆரம்பித்தார்.

''சேனாதிபதி! நிறுத்தும்!'' என்று மாமல்லர் கர்ஜனை செய்ததும், சேனாதிபதி வாயடைத்துப் போய் நின்றார். இதுவரை மாமல்லர் அவரிடம் இம்மாதிரி பேசியதே இல்லை. மரியாதைக் குறைவாகவோ மனம் புண்படும்படியோ அவரைப் பார்த்து ஒரு வார்த்தையும் கூறியதே இல்லை. மாமல்லரின் இந்தப் புதிய ருத்ராவதாரம் பரஞ்சோதிக்குப் பிடிபடவே இல்லை.

மாமல்லர் மேலும் சொல்லம்புகளைப் பொழிந்தார் : ''என்னை யார் என்று எண்ணிக் கொண்டீர்? இந்தச் சிற்பி மகள் தான் என்னை யார் என்பதாக எண்ணிக் கொண்டாள்? என்ன தைரியத்தினால் இந்த மாதிரி ஓலை எழுத அவள் துணிந்தாள்? நீங்கள் இரண்டு பேரும் பல்லவ குலத்தின் பெருமையைக் குலைத்துப் பாழாக்க இப்படி எத்தனை காலமாகச் சதி செய்தீர்கள்? இந்த மூடப் பெண் புத்தியில்லாமல் பிடிவாதம் பிடிக்கும் போது இவளுடைய பிடிவாதத்துக்காக நாம் யுத்தத்துக்கு ஆயத்தம் செய்ய வேண்டும். இவள் பார்த்து யுத்தம் வேண்டாம் என்றால் உடனே இவளுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு யுத்தத்தை நிறுத்தி விட வேண்டுமா? பல்லவ சாம்ராஜ்யமே இவளுக்காகத்தான் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டாளா? பல்லவ நாட்டுப் பிரஜைகளும் பல்லவ சக்கரவர்த்தியும் இவளுக்குத் தொண்டு செய்யும் அடிமைகள் என்று எண்ணிக் கொண்டாளா? இந்த யுத்தம் இவளுக்காகவே ஏற்பட்டது என்று நினைத்துக் கொண்டல்லவா இப்படி ஓலை எழுதத் துணிந்தாள்? ஒன்பது வருஷம் பிரயத்தனம் செய்து இந்த மகத்தான சைனியத்துடன் நான் படையெடுத்து வந்தது இந்தச் சபல புத்தியுள்ள



சிற்பி மகளின் மூட சபதத்தை நிறை வேற்றுவதற்காக அல்ல; இதை நீர் நன்றாய்த் தெரிந்து கொள்ளும். பல்லவ குலத்தின் பங்கமுற்ற கௌரவத்தை நிலைநாட்டுவதற் காகவே நான் வந்தேன். மகேந்திர சக்கர வர்த்தி மரணத் தறுவாயில் எனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றும் பொருட்டுப் படையெடுத்து வந்தேன். பதினெட்டு வய தில் மகாமல்லன் என்று பட்டம் பெற்ற நரசிம்ம பல்லவனைப் பார்த்து நாவலம் சிரிக்காதிருக்கும் பொருட்டு வந்தேன். அற்ப புத்தியுள்ள சிற்பி மகளின் சபதத்தை நிறைவேற்றுவதற்காக வரவில்லை. இவ ளிடம் தர்மோபதேசம் பெற்று மோட்சம் அடைவதற்காகவும் நான் வரவில்லை. மேலே யுத்தத்தை நடத்துவதற்கு உமக்கு இஷ்டமில்லையென்று தெரிகிறபடியால் உமக்கு இந்த க்ஷணமே சேனாதிபதி உத்தி யோகத்திலிருந்து விடுதலை தருகிறேன்!''

இவ்வளவு நேரமும் சேனாதிபதி யையே பார்த்துப் பேசிய மாமல்லர் சட் டென்று இலங்கை இளவரசரைத் திரும்பிப் பார்த்து, ''மானவன்மரே! நம்முடைய சேனாதிபதி இப்படி நல்ல சமயத்தில் என் னைக் கைவிட்டு விடுவார் என்று அறிந்து தான் உம்மையும் உடன் அழைத்து வந்தேன். நல்லவேளையாக என் விருப்பத்தின்படி நடக்க நீர் ஒருவராவது இருக்கிறீரே! கோட் டையைத் தாக்குவதற்கு உடனே ஏற்பாடு

செய்யும். இன்றிரவே தாக்குதல் ஆரம்பமாகி விட வேண்டும்!'' என்றார்.

கோடை இடி குமுறி இடித்தாற் போன்ற குரலில் மாமல்லர் இவ்விதம் கர்ஜனை செய்து ஓய்ந்ததும் சிறிது நேரம் அங்கு நிசப்தம் குடிகொண்டிருந்தது. அனைவரும் திகைத்துப் போய் நின்றார்கள். மாமல்லரையும் பரஞ்சோதியையும் இரண்டு உடலும் ஓருயிருமான நண்பர்கள் என்று அவர்கள் அதுகாறும் எண்ணியிருந்தார்கள். பரஞ்சோதியைப் பார்த்து மாமல்லர் இவ்வளவு கடுமையான மொழிகளைக் கூறியது அவர்களைப் பெருங்கலக்கத்துக்கு உள்ளாக்கியது.

மானவன்மரோ, 'இது என்ன? பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்ததே! சேனாதிபதியை என்றென்றைக்கும் நமது விரோதியாக்கிக் கொண்டோமே?' என்று எண்ணி வேதனையடைந்து சும்மா நின்றார்.

''மானவன்மரே! ஏன் நிற்கிறீர்?'' என்று மாமல்லர் அதட்டவும், மானவர்மர் பரஞ்சோதியைப் பார்த்தார். மற்றவர்களைப் போலவே அத்தனை நேரமும் திகைத்து நின்ற பரஞ்சோதி அப்போது ஓர் அடி முன்னால் வந்து தழுதழுத்த குரலில், பல்லவேந்திரா! பன்னிரண்டு வருஷம் பல்லவ சாம்ராஜ்யத்துக்காக நான் செய்திருக்கும் சேவையை முன்னிட்டு ஒரு வரம் அருள வேண்டும்!'' என்றார்.

மாமல்லர் மறுமொழி ஒன்றும் சொல்லாமலிருக்கவே பரஞ்சோதி மேலும் கூறினார்: ''பிரபு! தாங்களும் நானும் இதோ தெரியும் இந்த வாதாபி நகரத்துக்குள்ளே நாற்சந்தியில் நிற்கும் புலிகேசியின் ஜய ஸ்தம்பத்துக்கருகில் நின்று ஒரு சபதம் எடுத்துக் கொண்டோம். கூடிய சீக்கிரம் படையெடுத்து வந்து அந்தப் பொய் ஜய ஸ்தம்பத்தைப் பெயர்த்துத் தள்ளி விட்டு அதற்குப் பதிலாகப் பல்லவ விஜயத்தின் ஞாபக ஸ்தம்பத்தை அதே இடத்தில் நிலை நாட்டவும், சிவகாமி தேவியை விடுதலை செய்து கொண்டு போகவும் பிரதிக்ஞை செய்தோம். அதை நிறைவேற்றும் பொருட்டுச் சென்ற ஒன்பது வருஷ காலமாக இரவும் பகலும் நாம் உழைத்து வந்தோம். அந்தப் பிரதிக்ஞை நிறைவேறும் வரையில் இந்தச் சேனாதிபதி பதவியை அடியேன் வகிப்பதற்கு அனுமதி கொடுங்கள்!'' என்றார்.

மாமல்லரின் முகத்தில் கோபாவேசம் தணிந்து ஓரளவு மகிழ்ச்சியும் மலர்ச்சியும் காணப்பட்டன. ''இதற்கு இவ்வளவு சுற்றி வளைத்து வரம் கேட்பானேன்? சேனாதிபதி! நான் விரும்புவதும் அதுவேதான். உடனே தாக்குதலை ஆரம்பியுங்கள்!'' என்றார்.

''தயவு செய்து மன்னிக்க வேண்டும். இன்னும் ஒரு சிறு கோரிக்கை, பிரபு! கோட்டையைத் தாக்க ஆரம்பித்து விட்டால் ஒரு பகல் ஓர் இரவுக்குள் துரிதமாக முடித்து வெற்றி பெற வேண்டும். அதற்குத் தக்க ஆயத்தம் செய்வதற்கு மூன்று நாள் அவகாசம் கொடுங்கள்!'' என்று சேனாதிபதி விநயத்துடன் கேட்டார்.

மாமல்லரின் மௌனம் அவர் வேண்டா வெறுப்பாகச் சேனாதிபதியின் கோரிக்கைக்கு இணங்கியதற்கு அறிகுறியாய் இருந்தது.

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

# வாதாபி கணபதி

மனிதர்களுக்குள்ளே இருவகை சுபாவம் உள்ளவர்கள் உண்டு. ஒருவகையார் கொடூரமான காரியங்களையும் காட்சிகளையும் பார்க்கப் பார்க்க அவற்றைக் குறித்து அலட்சியமாக எண்ணத் தொடங்குகிறார்கள். அப்புறம் அத்தகைய கொடூரமான காரியங்களைச் செய்வது அவர்களுக்குச் சகஜமாகி விடுகிறது. ஆரம்பத்தில் பரிதாபம் அளிக்கும் சம்பவங்கள் நாளடைவில் அவர்களுடைய மனத்தில் எத்தகைய உணர்ச்சியையும் உண்டாக்குவதில்லை.

இன்னொரு வகை சுபாவமுள்ளவர்களும் இந்த உலகில் இருக்கிறார்கள். கொடூரமான காட்சிகளைப் பார்க்கப் பார்க்க அவர்களுடைய உள்ளம் உணர்ச்சியின்றித் தடித்துப் போவதற்குப் பதிலாக ஆத்திரம் அதிகமாகிறது. பரிதாப சம்பவங்களைப் பார்க்கப் பார்க்க அவர்களுடைய மனவேதனை மிகுதியாகிறது. அநீதிகளையும், அக்கிரமங்களையும் காணக் காண அவற்றை உலகிலிருந்து ஒழிக்க வேண்டுமென்ற பிடிவாதம் அதிகமாக வளர்கிறது. பிந்திய சுபாவமுள்ள மாந்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர் சேனாதிபதி பரஞ்சோதி. இரத்தத்தைப் பார்க்கப் பார்க்க இரத்த வெறி அதிகமாகும் ராட்சஸ வர்க்கத்தை அவர் சேர்ந்தவரல்ல. வாதாபிப் பெரும் போரில் போர்க்களத்திலிருந்து ஓடிய இரத்த

வெள்ளத்தையும் மலை மலையாகக் குவித்து கிடந்த மனித உடல்களையும் பார்த்து, படுகாயமடைந்து உயிர்போகும் தறுவாயில் அலறிக் கொண்டிருந்தவர்களின் ஓலத்தையும் கேட்ட பிறகு, பரஞ்சோதியின் உள்ளத்தில், 'இந்தப் பயங்கரமெல்லாம் என்னத்திற்கு? மனிதருக்கு மனிதர் கொடுமை இழைப்பதும் கொன்று கொண்டு சாவதும் எதற்காக' என்ற கேள்விகள் எழுந்திருந்தன.

அத்தகைய மன நிலைமையில் சிவகாமி தேவியின் ஓலை வரவே, அதில் எழுதியிருந்த ஒவ்வொரு வார்த்தையும் உண்மையென்று அவருக்குப் பட்டது. மேலும் அவ்விதக் கொடுஞ் செயல்களில் தம்மைப் புகவொட்டாமல் தடுத்தாட்கொள்வதற்காக இறைவனே சிவகாமி தேவியின் மூலம் அத்தகைய உபதேசத்தைச் செய்தருளியதாக அவர் எண்ணினார். இல்லாவிடில், மாமல்லருக்கு நேராக எழுதாமல் ஆயனர் மகள் தமக்கு அந்த ஓலையை எழுத வேண்டிய காரணம் என்ன?

சிவகாமி தேவியே தமது சபதத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை என்று சொல்லி விட்டபடியால், மாமல்லரும் அதற்கு உடனே இணங்கி விடுவார் என்று பரஞ்சோதி கருதினார். புலிகேசி பத்து வருஷத்துக்கு முன்னால் பல்லவ நாட்டில் செய்த கொடுமைகளுக்காக இப்போது வாதாபி நகரின் ஜனங்கள் மீது பழி தீர்த்துக் கொள்வதில் யாருக்கு லாபம்? மேலும், இது இத்துடன் போகும் என்பது என்ன நிச்சயம்! பத்து வருஷங்களுக்கு முன்னால் புலிகேசி பல்லவ நாட்டில் செய்த அக்கிரமங்களுக்கு இப்போது வாதாபி மக்கள் மீது நாம் பழிவாங்குகிறோம். அதே மாதிரி இன்னும் சில வருஷம் கழித்துச் சளுக்க வம்சத்தார் மறுபடி பல்லவ நாட்டின் மீது பழிவாங்கப் பிரயத்தனப்படலாம் அல்லவா? நாட்டை ஆளும் மன்னர்கள் தங்களுடைய சொந்தக் கௌரவத்தையும் குல கௌரவத்தையும் நிலைநாட்டிக் கொள்வதற்காக ஒருவரையொருவர் பழிவாங்க முற்படுவதனால், இருதரப்பிலும் குற்றமற்ற ஜனங்கள் அல்லவா சொல்ல முடியாத எத்தனையோ அவதிகளுக்கு உள்ளாகிறார்கள்.

இப்படியெல்லாம் சேனாதிபதி பரஞ்சோதியின் உள்ளம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. இடையிடையே மாமல்லர் விடுத்த கூரிய சொல்லம்புகளின் நினைவு அவருக்கு வேதனையளித்துக் கொண்டிருந்தது. மாமல்லருக்கும் தனக்கும் உள்ளமும் உயிரும் ஒன்றே என்பதாக எண்ணி மனப்பால் குடித்துக் கொண்டிருந்ததெல்லாம்

## அருள்வாக்கு



மனோ, வாக், காயம் என்கிறபடி மனஸால் பகவத் ஸ்மரணம், வாக்கினால் மந்திரம், காயத்தால் காரியம் மூன்றையும் சேர்த்துத்தான் ஆசாரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மந்திரம் அல்லது பகவத் நாமம் இல்லாமல் காரியத்தைப் பண்ணுவதில் பிரயோஜனம் இல்லை. மனுஷ்யன் செய்கிற காரியத்தில் அநேகம் எல்லா ஜீவஜந்துக்களுந்தான் செய்கின்றன. ஒரு கிருமியிலிருந்து ஆரம்பித்து எந்த ஜீவ ராசியும் சாப்பிடத்தான் செய்கிறது. அப்படியே மனுஷ்யனும் செய்தால் மனுஷ்ய ஜன்மா எடுத்து என்ன பிரயோஜனம்? அதனால் தான் இவன் பிராணாஹுதி செய்து, கோவிந்த நாமாவைச் சொன்னபடி சாப்பிட வேண்டுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. மீன் கூடத்தான் ஸதாவும் ஜலத்திலேயே மூழ்கியிருக்கிறது. அதனால் அது ஸ்நானம் பண்ணி மடியாயிருக்கிறதாகி விடுமா? மந்திரவத்தாகக் குளித்தால்தான் அது ஸ்நானமாகும். அல்லது கோவிந்தா, கோவிந்தா என்றோ, இஷ்ட தெய்வத்தின் நாமத்தைச் சொல்லிக் கொண்டோ ஸ்நானம் செய்ய வேண்டும். இப்படி எல்லாமே காரியமாக மட்டுமில்லாமல் மனஸும் வாக்கும் ஈச்வரனிடம் செலுத்தப்பட்டுச் செய்யப்படுவதுதான் ஆசாரம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

பொய்யாக அல்லவா போய் விட்டது? தம் முடைய யோசனையை அவ்வளவு அலட்சியமாகப் புறக்கணித்ததோடு, மற்றவர்களுக்கு முன்னால் தம்மை அவ்வளவு அகௌரவப்படுத்திப் பேசி விட்டாரே! அரச குலத்தினரின் சுபாவமே இப்படித்தான் போலும்! அதிலும் அந்த இலங்கை நாட்டான் வந்ததிலிருந்து மாமல்லருடைய சுபாவமே மாறிப் போய் விட்டது! எல்லாம் அவனால் வந்த வினைதான்.

மாமல்லரிடம் மூன்று நாள் அவகாசம் கொடுக்கும்படி சேனாதிபதி பரஞ்சோதி கோரிய போது, கோட்டைத் தாக்குதலுக்குத் தக்க ஆயத்தம் செய்வதற்காகவே அவ்விதம் கோருவதாகக் கூறினார். இந்தக் காரணம் என்னவோ உண்மைதான். ஆயத்தமில்லாமல் ஆரம்பித்துப் பத்து நாளில் செய்யக் கூடிய காரியத்தைத் தகுந்த ஆயத்தங்களுடன் ஆரம்பித்து ஒரே நாளில் செய்து விடலாம் என்னும் உண்மையைச் சேனாதிபதி பரஞ்சோதி தமது அனுபவத்தில் கண்டறிந்திருந்தார். எனவே, அந்த முறையைத் தம் யுத்த தந்திரங்களின் முதன்மையான தந்திரமாக அநுஷ்டித்து வந்தார்.

ஆனால், சேனாதிபதி மூன்று நாள் அவகாசம் வேண்டும் என்று கேட்டதற்கு மேற்கூறிய காரணத்தைத் தவிர இன்னும் ஒரு முக்கிய காரணம் இருந்தது.

அது, இன்னமும் வாதாபிக் கோட்டைக்குள்ளே இருந்த சிவகாமி தேவியைக் கோட்டைத் தாக்குதல் ஆரம்பிப்பதற்குள்ளே பத்திரமாக வெளியில் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்பதுதான். பல்லவ சைனியம் கோட்டையை வெளியிலிருந்து தாக்க ஆரம்பிக்கும் போது கோட்டைக்குள்ளே ஆயனரின் குமாரிக்கு ஏதேனும் ஆபத்து விளையாது என்பது என்ன நிச்சயம்?

இதைப் பற்றி ஏற்கெனவே மாமல்லரும் பரஞ்சோதியும் கலந்து யோசனை செய்து கோட்டைக்குள்ளே ஒரு சிலரை முன்னதாக அனுப்புவதற்குச் சுரங்க வழி ஏதாவது இருக்கிறதா என்று கண்டுபிடிக்கச் சத்ருக்னனையும் குண்டோதரனையும் ஏவியிருந்தார்கள். இவர்களுடைய முயற்சி என்ன ஆயிற்று என்று பார்ப்பதற்காகவும் சேனாதிபதி மூன்று நாள் அவகாசம் கேட்டார்.

அந்த மூன்று நாளும் முடியும் சமயம் இப்போது வந்து விட்டது. மூன்றாம் நாள் சூரியன் அஸ்தமிக்கும் நேரம். அன்றிரவு மாமல்லர் தமது முடிவைச் சொல்லி விட்டால், உடனே தாக்குதலை ஆரம்பிக்க வேண்டியதாயிருக்கும். ஆனால், சத்ருக்னனும் குண்டோதரனும் இன்னும் வந்தபாடில்லை. இந்தத் தர்ம சங்கடத்துக்கு என்ன செய்வது? மாமல்லர் ஒருவேளை தம் கருத்தை மாற்றிக் கொண்டு சண்டையில்லாமலே கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்ளுவதாயிருந்தால் நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில், சிவகாமி தேவிக்கு அபாயம் ஒன்றும் நேராமல் பாதுகாப்பது எப்படி?

இவ்விதமெல்லாம் பலவாறாகச் சிந்தனை செய்து கொண்டே பல்லவ சேனாதிபதி வாதாபிக் கோட்டையின் மதில் ஓரமாகக் குதிரை மீது வந்து கொண்டிருந்தார். கோட்டைக்கு உட்புறத்தில் ஏதோ சலசலப்பு ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. இத்தனை நாளும் கோட்டைக்குள்ளே எல்லையற்ற மௌனம் சதா குடி கொண்டிருந்திருக்க அதற்கு மாறாக இப்போது ஏதோ நானாவிதச் சப்தங்கள் எழுந்து கொண்டிருந்தன. இதனால் பரஞ்சோதியின் உள்ளக் கொந்தளிப்பு அதிகமாயிற்று. கோட்டையின் பிரதான முன்வாசலை அடைந்ததும் பரஞ்சோதி குதிரையை நிறுத்தினார். கோட்டையைத் தாக்குவதாயிருந்தால் அந்த

## உலகத்தின் முதல் பெண் டாக்டர்

தத்துவ மேதை "பெர்ட்ரண்டு ரஸ்ஸலின்" தாய் அக்காலத்தில் பெண்கள் சம உரிமைக்காக அரும்பாடுபட்டார். தமது பிரசவம் ஒரு பெண் டாக்டராலேயே கவனிக்கப்பட வேண்டும் என்று விரும்பி, "காரட் ஆண்டர்ஸன்" என்ற பெண் டாக்டரைப் பிரசவத்திற்கு அமர்த்திக் கொண்டார். இவர்தான் உலகின் முதல் பெண் டாக்டர். பெண்களுக்குச் சம உரிமை வழங்கப்படாத காலமாகையால் டாக்டருக்குப் படித்துத் தேறியிருந்தும் "காரட் ஆண்டர்ஸன்"னை அரசாங்கம் "டாக்டர்" என்று அங்கீகரிக்காமல், "அங்கீகாரம் பெற்ற தாதி" என்றே பட்டம் கொடுத்திருந்தது.

– நவமலை பி. ஜெயப்பிரகாஷ்



பிரதான வாசலின் பிரம்மாண்டமான கதவுகளை முதல் முதலில் உடைத்தெறிந்தாக வேண்டும். அப்போதுதான் ஏககாலத்தில் அநேக வீரர்கள் உள்ளே புகுவது சாத்தியமாகும். சொற்ப நேரத்தில் நகரைக் கைப்பற்ற முடியும். இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் முன்னமே செய்யப்பட்டிருந்தன வெனினும் கடைசி முறையாக யானைப் படை வீரர்களுக்குக் கட்டளையிடுவதற்கு முன்னால் ஒரு தடவை அந்த வாசலை நன்றாய்க் கவனிக்கச் சேனாதிபதி விரும்பினார். எனவே, குதிரை மேலிருந்து இறங்கி வாசலை நெருங்கி வந்தார். அப்போது அந்த வாதாபிக்கோட்டை முன் வாசலில் அமைக்கப்பட்டிருந்த அருமையான வேலைப்பாடமைந்த சிற்பங்கள் அவர் கவனத்தைக் கவர்ந்தன. அந்தச் சிற்பங்களிலே கணபதியின் விக்ரகம் ஒன்றும் இருந்தது. பரஞ்சோதி அதன் அருகில் சென்று கைகூப்பி நின்றார். மனத்திற்குள் பின்வருமாறு பிரார்த்தனை செய்து கொண்டார் : 'விக்னங்களையெல்லாம் நிவர்த்தி செய்யும் விநாயகப் பெருமானே! நாங்கள் வந்த காரியம் நன்கு நிறைவேற அருள்புரிய வேண்டும்! என் குருதேவரின் குமாரி சிவகாமி தேவிக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாமல் அவரைப் பத்திரமாய் அவருடைய தந்தை ஆயனிடம் ஒப்புவிப்பதற்குத் துணைசெய்ய வேண்டும். என்னுடைய இந்தப் பிரார்த்தனையை நீ நிறைவேற்றி வைத்தால் பதிலுக்கு நானும் உனக்கு இந்தக் கோட்டைத் தாக்குதலில் எவ்விதத் தீங்கும் ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறேன். உன்னை என் பிறந்த ஊருக்குக் கொண்டு போய் ஆலயங் கட்டிப் பிரதிஷ்டை செய்வித்துத் தினந்தோறும் பூஜையும் நடத்துவிக்கிறேன்.

இவ்வாறு பரஞ்சோதி பிரார்த்தனை நடத்தி முடித்த அதே கணத்தில் அந்தக் கோட்டை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் நின்ற பல்லவ வீரர்களிடையே மிக்கப் பரபரப்பு காணப்பட்டது. கோட்டை வாசலின் உச்சியைப் பார்த்தவண்ணம் அவர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். அது சேனாதிபதியின் கவனத்தையும் கவரவே, அவர் அந்த வீரர்களை நோக்கினார். அவர்களில் ஒருவன், "சேனாதிபதி! வெள்ளைக் கொடி இறங்கி விட்டது!" என்று கூவினான்.

சேனாதிபதி தாமும் அவர்களிருந்த இடத்துக்கு விரைந்து சென்று கோட்டை வாசலின் உச்சியைப் பார்த்தார். மூன்று நாளாக அங்கே பறந்து கொண்டிருந்த சமாதான வெள்ளைக் கொடி காணப்படவில்லை!

(தொடரும்)

அன்று சம்பள நாள். மாதச் சம்பளம் வாங்கும் எல்லோர் வீட்டிலும் நடப்பதைப் போல அந்த மாதத்தின் செலவுக் கணக்கு களைப் பட்டியலிட ஆரம்பித்தோம் நானும், என் மனைவி பானுவும்.

''பானு, கைமாற்றுக் கடன் ரூபாய் நூற்றி ஐம்பதுன்னு நோட்டுல எழுதிடு.''

''ஆமாம், பிள்ளையார் சுழி போட்டு ஆரம்பிக்கிற மாதிரி மாசா மாசம் கடைசி பத்து தேதியை ஓட்டறதுக்குக் கடன் வாங்க றதும், சம்பளம் வாங்கினதும் உடனே அதைக் கொடுத்துடறதும் வழக்கமாய் நடக் கறதுதானே, ப்ச!'' என்று அலுத்துக் கொண் டவளை அனுதாபத்துடன் பார்த்தேன்.

மத்தியவர்க்கக் குடும்பத் தலைவியின் களை அவள் முகத்தில் தெரிந்தது. ஆட்டைத் தூக்கி மாட்டில் போடுவது போல ஒவ் வொரு மாதமும் ஏதாவது செய்து குடும்ப வண்டியை ஓட்டும் களைப்பு அவள் உடை யலங்காரத்திலும், மெலிந்த தேகத்திலும் தெரிந்தன.

''என்ன பண்றது பானு? இது உலகத்தி லுள்ள எழுபத்தைந்து சதவிகித மக்களுக்கும் பொதுவான பிரச்னை, ஹூம்!'' என்று பெரு மூச்சு விட்டேன்.

''ஏங்க இப்படிப் பண்ணினால் என்ன?'' என்று ஆர்வமாய்க் கேட்டவளைக் கேள்விக்குறியுடன் பார்த்தேன்.

''மாசா மாசம் நமக்குத் துண்டு விழற தொகை எவ்வளவு?''

''நூறு ரூபாயிலிருந்து இருநூறு ரூபாய் வரைக்கும். அது, அந்தந்த மாசச் சூழ்நிலை யைப் பொறுத்தது.''

''கரெக்ட். நாம ஒரு ரெண்டு மாசம் சிக்கனமாய் இருந்து அந்தப் பணத்தை மிச்சப்படுத்திடுவோம்னா அப்புறம் பட்ஜெட் டில் துண்டு விழாதே!'' என்றவளை வியப் புடன் பார்த்தேன்.

# 'ஜெட்டில்



# சிக்கனம் - தேவை இக்கணம்!

கிருஷ்ணா

இவள் சொல்வதும் சரிதான். முடியுமா?

''முடிஞ்சதாங்க ஆகணும். உங்க ஆபீஸ் நண்பர்களிடம் ஒவ்வொரு மாசமும் நீங்க கடன் கேட்கறப்ப உங்க மனசு எவ்வளவு கஷ்டப்படும். எதுக்கு அப்படி அவமானப் படணும்?'' என்றவளை யோசனையுடன் பார்த்தேன்.

''சரி, மளிகை சாமான் லிஸ்டை எடு. எதை, எதைக் குறைக்கலாம்னு பார்ப் போம்.''

''எல்லா சாமானிலுமே இருபத்தஞ்சு சதவிகிதம் வெட்டுதான். அரிசியை மட்டும் எப்பவும் வாங்கற அளவே வாங்கிடலாம்'' என்றாள் பட்டென.

முன்பே இதைப் பற்றி மனசுக்குள் அலசி இருப்பாள் போலும்.

''வேலைக்காரியைக் கூட நிறுத்திட லாம் பானு. துணிகளையெல்லாம் நான் தோய்ச்சுடறேன். நீ, வீட்டைக் கூட்டி, மெழு கறது போன்ற காரியங்களைப் பண்ணிடு.''

''சபாஷ். நல்ல ஐடியாங்க. அதுல ஒரு அம்பது ரூபாய் குறையுமே. அதோட சோப்பை நாமே துணிகளுக்குப் பார்த்து உபயோகிச்சா அதுலேயும் மிச்சமாகும். வேலைக்காரியிடம் இதையெல்லாம் எதிர் பார்க்க முடியாதே'' என்றவளை ஆமோதித் தேன்.

''ஆபீசுக்குக் கூட பஸ்சுல போகாம சைக்கிளில் போனால் பஸ் டிக்கெட் செலவு குறையுமே.''

''உங்க ஆபீஸ் இங்கேயிருந்து நாலு கிலோ மீட்டர் தள்ளியிருக்கே. காலை, மாலை ரெண்டு வேளை மிதிக்கணும். உங்க ளுக்குக் கஷ்டமாச்சே.''

''அதைப் பார்த்தால் முடியுமா? பஸ் சுல தினசரி இரண்டரை ரூபாய் செலவு. மாசத்துக்கு அதுலேயும் கணிசமான அளவு மிஞ்சுமே. முடிஞ்ச அன்னைக்கு சைக்கிள். முடியாதப்ப பஸ் இருக்கவே இருக்கு. உடம்புக்கும் நல்லது. என் தொப்பை குறை யும்'' என்று ஜோக்கடிக்க முயன்றேன்.

''குளியல் சோப்புக்குப் பதிலாகக் கடலை மாவோ, இல்லை பயத்த மாவோ அரைக்க வைச்சுத் தேய்ச்சுக்கிட்டோம்னா அந்தச் செலவும் குறையுமே.''

''என்ன பானு, அதுல என்ன பெரிசா மிஞ்சிடப் போகுது'' என்றேன் சந்தன சோப் பின் மணத்தை விட மனசில்லாமல்.

''சிறு துளிதான் பெருவெள்ளமாய் மாறுது. அஞ்சு பைசா ஆனாலும் சிக்க னம்தான்'' என்று கண்டிப்பாய்ச் சொன்னவ ளுக்கு வேறு வழியின்றித் தலையாட்டி வைத்தேன்.

மாத பட்ஜெட்டை உற்சாகமாய்ப் போட்டுப் பார்த்ததில் நூறு ரூபாய்க்கு மேல் பணம் சேமிக்க முடியும் போலிருந்தது.

''பரவாயில்லையே. நம்ம திட்டம் வெற்றி அடைஞ்சிடும் போலிருக்கே. கை கொடு'' என்று சந்தோஷமாய் அவள் கை யைப் பிடித்து இழுத்து, கன்னத்தில் முத்த மிட முயன்றேன்.

''ம், பசங்க இருக்காங்க'' என்று விலகிக் கொண்டாள்.

பால், காஸ் சிலிண்டர், மின்சாரம், மளிகை இத்யாதிகளுக்குக் கொடுக்க வேண் டிய பணத்தைத் தனித்தனி கவரில் போட்டு மேலே எழுதி பீரோவில் பணத்தை வைத் துப் பூட்டி விட்டு வந்தாள்.

இருவர் முகத்திலுமே நிம்மதியும், மகிழ்ச்சியும் முகாமிட்டிருந்தன.

''பானு, டி.வி.யைப் போடு'' என்று சொல்லி அவளைப் பார்த்துக் கண் சிமிட்டி னேன்.

மந்தகாசமாய்ப் புன்னகைத்தபடி ஸ்விட்சைத் தட்டி விட்டு வந்து அமர்ந்தாள்.

ஷோபனா ரவியின் குரலில் செய்திகள் ஆரம்பித்தன.

கேட்டவுடன் இருவரும் அதிர்ந்து போனோம். இத்தனை நேரம் இருந்த மகிழ்ச்சி தொலைந்து போய் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

காஸ் சிலிண்டர் விலை உயர்வு, பெட் ரோல், டீசல் விலை உயர்வு, அதைத் தவிர புது வரிகள்... என்று செய்திகள் காதில் விழ, கோபமாய் வந்தது.

பெட்ரோல், டீசல் விலை உயர்ந்தால் போக்குவரத்துச் செலவு அதிகரிக்கும், அதனால் எல்லாப் பொருட்களின் விலை யும் கூடும். அனைத்து வகை பொருட்களும், லாரியிலோ, ரயிலிலோதானே வந்தாக வேண்டும்...!

எத்தனை சிக்கனமாய் பட்ஜெட் போட முயன்றாலும் இப்படி திடீர், திடீர் என அர சாங்கம் விலையை உயர்த்திப் புது வரி களைப் போட்டு, மத்தியதர வர்க்கத்தின் வயிற்றில் அடிக்கிறதே! அப்புறம் எதற்கு பட்ஜெட் என்று தனியாக வருடம் ஒருமுறை இவர்கள் போட வேண்டும்!

கோபமும், இயலாமையும் பொங்கிட டி.வி.யை வெறித்தேன்.

செய்திகள் முடிந்து விட்டிருந்தன.

''வீட்டில் சிக்கனம் - தேவை இக் கணம்'' என்ற வரிகளை டி.வி.யில் பார்த்த தும் பற்றிக் கொண்டு வந்தது எனக்கு.



* தேவர் மகன்

''தீபாவளிக்கு இரண்டு நாட்களுக்கு முன்புதான் தீபாவளி ரிலீஸ் படங்கள் பற்றிய ஃபைனல் பொசிஷன் தெரியும்'' என்கிறார்கள். 'கோலிவுட்' (கோடம்பாக்கத்துக்குச் செல்லப் பெயர்!) நண்பர்கள்.

* குற்றப் பத்திரிகை



* திருமதி பழனிச்சாமி

# தீபாவளி ரிலீஸ் திரைப்படங்கள்



எனவே தீபாவளி ரிலீஸ் என்று நம்பப் படும் சினிமாக்களைப் பற்றிய விஷயங் களைத் தொகுத்துத் தருகிறோம் :

## இன்னொரு அண்ணாமலை!

மிகவும் பரபரப்பாக வியாபார ரீதியில் திரையுலகில் பேசப்படும் படம் பாண்டி யன். ரஜினி-குஷ்பு ஜோடி. இது இன்னொரு அண்ணாமலை - அதாவது படு மசாலா என்கிறார்கள். ரஜினிகாந்த் - எஸ். பி. முத்து ராமன் காம்பினேஷன் என்றாலே, மசாலா வுக்குக் குறைவிருக்காது. போதாக்குறைக்கு இது எஸ்.பி. முத்துராமனின் சொந்தப்படம். கேட்க வேண்டுமா?

வன்முறையை எதிர்த்துப் போராடும் இளைஞனின் கதையாம். இந்த ஏராள லட்ச ரூபாய் பட்ஜெட் படம் மூன்றே மாதங்களில் எடுத்து முடிக்கப்பட்டது என்பது அசாதா ரண விஷயம். இசை இளையராஜாதான். இளையராஜாவின் மகன் 'கார்த்திக் ராஜா' (ரஹ்மானுக்குப் போட்டியாய் இளையவ ரின் அறிமுகம்?) ஒரு பாடலுக்கு இசை யமைத்திருப்பதாய்ச் சொல்லுகிறார்கள். பாடல் கேஸட் வெளியீட்டு விழாவில் கார்த்திக் ராஜாவுக்குத் தங்கச் சங்கிலி பரிசளித்தார் ரஜினி.



● ராஜீவாக அனுபம் கெர்

## டிபிகல் மீசை!

ரஜினி படத்துக்கு இணையாக எதிர் பார்ப்புகளைத் தூண்டியுள்ள படம் கமலின் 'தேவர் மகன்'. கதை மட்டுமில்லை வசனம் கூட கமல்தான்! அவருக்கு 'டிபிகல்' தேவர் இனத்து மீசை. டைரக்ஷன் பரதன். பெரிய தேவராய் நடிக்கும் சிவாஜிக்கு இது 'இன் னொரு முதல் மரியாதை'யாக அமையும் என்கிறார்கள். கதாநாயகிகள் ரேவதியும், கௌதமியும். படத்தின் ஹைலைட்ஸ் என்று ஒரு கோலிவுட்காரர் சொன்னவை : கமலின் சிலம்புச்சண்டையும், கௌதமியுட னான (நெருக்கமான) காதல் காட்சிகளும். கிராமப்புறங்களின் அழகுகளைக் காமிரா வில் சிறைப் பிடிப்பவர் பி. ஸி. ஸ்ரீராம். படத்துக்காக ஒரு மாபெரும் தேரை வடிவ மைத்து, க்ளைமாக்ஸில் அந்தத் தேரை வெடிகுண்டு வைத்துத் தகர்த்தார்களாம். இன்னொரு கொசுறுத் தகவல் : சிவாஜி யும், கமலின் பெண் ஸ்ருதியும் சேர்ந்து இப்படத்தில் ஒரு பாட்டு பாடியிருக் கிறார்கள்.

## பாக்யராஜ் பாணி

பஞ்சு அருணாசலம் தயாரித்திருக்கும் படமான 'ராசுக் குட்டி'யில் ஹீரோ பாக்ய ராஜ். இசை இளையராஜா. கதை, வசனம், டைரக்‌ஷன் பஞ்சுதான். வழக்கமான பாக்ய ராஜ் பாணி காமெடிப் படம். படம் தூள் கிளப்பப் போகுது பாருங்க!' என்கிறார் ஓர் உதவி இயக்குனர்.

## ஆச்சர்ய இணைப்பு!

காவியத் தலைவன் படத்தின் மூலம் ஒரு ஆச் சரியமான இணைப்பு தமிழ்த் திரையுலகில் நிகழ்ந்துள்ளது. ஆம்! பி ர ம் ம ா ண் ட மான முறையில் படம் தயா ரித்துப் பழக்கப்பட்ட இந்தத் தலைமுறை ஆபாவாணனும், குடும் பப்பாங்கான படங் களை எடுத்துத் தள்ளிய அந்தக் கால டைரக்டரான கே. எஸ். கோபாலகிருஷ்ணனும் இந்தப் படம் மூலம் இணைந்திருக்கிறார்கள். ஹீரோ விஜய காந்த். ஹீரோயின்? பானுப்ரியா - பானு ப்ரியா. கேமரா - என். கே. விஸ்வநாதன். அமர்க்களப்படுத்தியிருக்கிறார். படத்தின் சில காட்சிகள் சிங்கப்பூரில் எடுக்கப் பட்டன. நாசருக்கும் படத்தில் ஒரு நல்ல ரோல். இசையமைப்பாளர் ஒரு புதுமுகம். பெயர் சித்தார்த்தா.

## வித்தியாச தலைப்பு; படம்?...

திருமதி பழனிச்சாமி. இப்படி வித்தியாசமானதொரு தலைப்புக் கொண்ட படத்தில் திருமதி பழனிச்சாமி - சுகன்யா. சத்யராஜ் தான் திரு. ப. சாமி. கிராமத்துப் பண்ணை யாரை எதிர்த்துத் துடிப்பான இளைஞனும், அவன் மனைவியான ஸ்கூல் டீச்சரும் போராடுவதுதான் கதை. சத்யராஜின் மானேஜரான' ராமநாதன்தான் தயாரிப் பாளர். கிளைமாக்ஸ் காட்சியைப் பட மெடுக்க மட்டும் பதினைந்து லட்சம் ரூபாய் செலவில் செட் போட்டார்களாம்! சொந்தப் படம் என்பதால், சத்யராஜ் தன் கேரக்டர், ஸ்டண்ட் காட்சிகள் இவற்றிலெல்லாம் தனிக் கவனம் செலுத்தியிருப்பதாகத் தெரி கிறது.

• கார்த்திக் - கிரைம் - காமெடி படம்

## கிரைம் காமெடி!

சக்ரவர்த்தி என்று ஒரு படம் - எம். பாஸ்கர் இயக்கத்தில். கார்த்திக்தான் ஹீரோ. கிரைம் கதையில் காமெடியும் கலந் திருக்கிறது. படத்துக்கு இசை தேவா. முன் னாள் போலீஸ் ஐ. ஜி. பொன். பரமகுருவும் இப் படத்தில் நடிக்கிறார். ஹீரோயின் பானுப்ரியா.

## முக்கோணக் காதல்

சின்னத் தம்பி எடுத்த அதே லொக்கே ஷன்களில் எடுக்கப்பட்டது செந்தமிழ்ப் பாட்டு. இந்தப் படத்தின் இயக்குனர்



● பிரபு



● வாசு

பி. வாசு. ஹீரோ - பிரபு. ஹீரோயின் - குஷ்பு இல்லை! சுகன்யா மற்றும் கஸ்தூரி. இது ஒரு முக்கோணக் காதல் கதை. படத்தைத் தயாரிப்பவர் எம். எஸ். விஸ்வநாதனின் மகன் என்பதாலோ என்னவோ, பாடல்களுக்கு இளையராஜா இசையமைக்க, படத்துக்கு ரீ-ரிக்கார்டிங் எம். எஸ்.வி.

## கதையான ராஜீவ் கொலை

தீபாவளிக்கு ரிலீஸ் செய்ய முயன்றும், அநேகமாய் ரிலீஸ் ஆவது கஷ்டம் என்று கூறப்படும் படம் குற்றப் பத்திரிகை. ராஜீவ் காந்தி கொலை சம்பந்தப்பட்ட கதை. டைரக்ஷன் ஆர். கே. செல்வமணி. தயாரிப்பும், கேமராவும் ரவி யாதவ். ராஜீவ் காந்தியாய் நடித்திருப்பவர் இந்தி நடிகர் அனுபம் கெர். இந்த ரோலுக்காக, பிபி காரேவல் தொலைக்காட்சிக்காகத் தயாரித்த ராஜீவ் காந்தி பற்றிய படத்தைப் பலமுறை பார்த்துப் பயிற்சி பெற்றாராம். தனு, சுபா இவர்களைப் போலவே தத்ரூபமாய்த் தோற்றமளிக்கும் புதுமுகங்களைக் கஷ்டப்பட்டுத் தேடிக் கண்டுபிடித்தார்களாம். சிவராசனாக நடித்திருப்பவர் மன்சூர் அலிகான். படத்தில் ஓர் இடத்தில் கூட 'விடுதலைப் புலி' என்ற வார்த்தையைப் பயன்படுத்தவில்லையாம். 'ஈழத்தின் ஒரு போராளிக் குழு' என்றே குறிப்பிடப்படுகிறதாம். படத்தின் டிரெய்லரை சென்சாருக்கு அனுப்பிய போது, மொத்தப் படத்தையும் பார்த்து விட்டுத் தான் டிரெயிலருக்கு சர்ட்டிபிகேட் தருவோம் என்று சென்சாரில் சொல்லி விட்டார்களாம். படத்தை அவசரம், அவசரமாய் முடிப்பதில் பிசியாய் இருக்கிறார்கள்.

● ராசுக்குட்டி...

## இரண்டு பெண்டாட்டிக்காரன்

மங்கள நாயகன் - வெகு நாட்களாய்த் தயாரிப்பில் இருந்த இந்தப் படம், ஒருவழியாக தீபாவளிக்குத் திரையைக் காணவிருக்கிறது. ஜெயசித்ராவின் கணவர் கணேஷ்தான் ஹீரோ கம் புரொடியூசர். இரண்டு பெண் டாட்டிக்காரன் கதை. இளவரசி, சாரதா ப்ரீதா நடித்திருக்கிறார்கள். காமெடி, சென்டிமென்ட் இரண்டும் இணைந்த இந்தப் படத்திற்கு வசனம் எழுதியுள்ளவர் வெங்கட். அந்தக் காலத்து 'யார் பிள்ளை?' டைப் படமாம்.

– எஸ். சந்திரமௌலி



● மு. இரவிச்சந்திரன், சேலம்.

*? கிளின்டன் 'கிளிக்' ஆகி விடுவாரா?*

! பெரோ மறுபடி களத்தில் குதித்தது புஷ்ஷுக்குப் பின்னடைவு. இதை அவரே உணர்ந்திருக்கிறார் என்பது அமைச்சர்களிடம் அவர் எழுதி வாங்கிக் கொண்ட ராஜினாமா கடிதங்கள் நிரூபிக்கும். 'சாதனைகள் புரிவதற்காக அமைச்சரவையை மாற்றவும் தயங்க மாட்டேன்' என்று மக்களுக்கு உறுதி அளிக்க அவர் கையாண்டுள்ள வழி இது. இதைப் பார்க்க புஷ் ஆடிப் போயிருக்கிறார் என்பதும் கிளின்டன் நம்பிக்கையோடு இருக்கிறார் என்பதும் தெளிவு.

● கே. கோபிநாத், ஈரோடு.

*? கல்கிக்குக் கிடைத்த மிகப் பெரிய பாக்கியம்?*

! அதன் தரமான வாசகர்கள்.

● ஜி. ஜி. கிருஷ்ணன், விசலூர்.

*? இதுவரை சிவகாமியின் சபதம் தொடரில் இடம்பெற்ற அமரர் மணியத்தின் ஓவியம் இடம்பெறாமல் சந்திரா என்பவரின் ஓவியம் இடம்பெற என்ன காரணம்?*

! சிவகாமியின் சபதம் முதன் முதலாகத் தொடராக வெளிவந்த போது ஓவியம்

## கிளின்டன் 'கிளிக்' ஆகி விடுவாரா?

வரைந்தவர் வர்மா. அவரது படங்கள்தாம் இப்போது கல்கியில் தொடர்ந்து வெளிவருகின்றன. தவிர, சிவகாமியின் சபதம் நூல் வடிவம் பெற்ற போது அதற்கு அற்புதமான வண்ண ஓவியங்கள் வரைந்தவர் ஓவியர் சந்திரா. அந்தப் படங்களையும் நேயர்கள் அனுபவிக்கலாமே என்பதால் அவ்வப்போது தர எண்ணியோம். ஓவியர் மணியம் சிவகாமியின் சபதத்துக்குப் படம் வரைந்ததில்லை. அஜந்தா சித்திரங்கள்தாம் அவர் கை வண்ணத்தில் மிளிர்ந்தன. அவற்றையும் அவ்வப்போது கல்கியில் சிவகாமியின் சபதம் தொடரின் இடை இடையே அளித்து வருகிறோம்.

● தஞ்சைத் தரணியன், முத்துப்பேட்டை.

*? 'ஜெ' ஆட்சிக்கு ஜனவரி 31 வரை கெடு விதித்துள்ளாரே சு. சுவாமி?*

! 'ஜனவரி. 31க்குள் அவரைப் பதவி இறக்க முடியவில்லையென்றால் தமிழகம் பக்கம் தலை வைத்தே படுக்க மாட்டேன்' என்று சூளுரைத்திருந்தால் பாராட்டலாம். இப்போ சும்மா வெறும் கலாட்டாவோடு சரி.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி.

*? எக்ஸ்பிரஸ் நிர்வாகத்தினரின் குடும்பச் சண்டைக்குத் தினமணி ஆசிரியர் கஸ்தூரி ரங்கன் பலிகடா ஆக்கப்பட்டிருப்பது நியாயமா?*

! கூடி வாழ்ந்தால் கோடி நன்மை. இரண்டுமே தவிர்க்கப்பட்டிருக்கலாம்.

● என். ரமேஷ், திருப்பாதிரிப்புலியூர்.

*? காவிரி நீர் பிரச்னை எங்கோ மூலையில் போய் விட்டதே?*

! ஆமாம், இயற்கையின் கருணையால் நிர்ணயிக்கப்பட்டதற்கு அதிகமாகவே நீர் வர, மேட்டூர் நிறைய... அதில் பிரச்னையும் மூழ்கிப் போய் விட்டது. வறட்சி வந்தால் தான் மறுபடி தலைவர்களுக்குப் புரட்சி பண்ண சுநாயாசமாய் வரும்!



● 'கிளிக்' ஆவாரா?



● பின்னடைவு

● சித வைரவன், சென்னை - 14.

*? குமரி அனந்தன் இவ்வளவு சிரமப்பட்டு பாத யாத்திரை மூலம் காங்கிரஸைத் தமிழகத்தில் மீண்டும் ஆட்சி பீடமேற்ற முயற்சி செய்கிறாரே. காமராஜரும், ராஜீவ் காந்தியுமே முயன்றும் முடியாமல் போன விஷயமாயிற்றே...?*

! வெற்றி பெறுவதை விட வெற்றி பெறுவதற்கான மனப்பூர்வமான முயற்சிகள் முக்கியம். இன்றைய விடாமுயற்சிதான் நாளைய வெற்றி. மாறாக 'நம்மால் வெற்றி பெற முடியாது' என்ற மனப்பான்மை



● ரொம்ப சிரமப்பட்டு...



● வெறும் கலாட்டா!

● தாம்தூம் பண்ணி...



● கட்சியிலிருந்து நீக்கம்!



மேலோங்கினால் நிரந்தர முதுகு சவாரி தான்.

● ஏ. சுகுமார், காட்டுக்காளூர். ❑

*? மாம்பலத்தில் புதிதாகக் கட்டப்பட்ட ரெயில்வே ட்ரக்கின் கட்டடம் இடிபடப் போவது பற்றி...?*

! அரசு முன் யோசனை இன்றிச் செயல்படுகிறது என்பதற்கு மேலும் ஓர் உதாரணம். இது வருந்தத்தக்க விஷயம். ரயில் லேக்களின் விஸ்தரிப்புத் திட்டம் இருப்பது பற்றி முன்கூட்டியே யோசித்துச் செயல்பட்டிருந்தால் மக்களின் வரிப்பணம் பல லட்சம் வீணாவதைத் தவிர்த்திருக்கலாம்.

● த. குணசேகரன், கவுந்தம்பாடி.

*? "கல்கி போன்ற பத்திரிகைகள் கூட குஷ்புவை அட்டைப் படத்தில் போடக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது" என்று இந்தியா டுடே வருத்தப்பட்டிருப்பது குறித்து..?*

! இந்தியா டுடே குஷ்புவை வைத்து தீபாவளி ஸ்பெஷல் கட்டுரை வழங்க ஒரு சால்ஜாப்பு தேடியது; அது கிடைத்தது என்றால் எங்களுக்குச் சந்தோஷமே. ஆனால் அது சால்ஜாப்பு தேடாமலே குஷ்பு ஸ்பெஷல் வெளியிடலாம் என்பதே எங்கள் முடிவான கருத்து. ஒரு உதாரணம் கூறுகிறேன் : மரிலின் மன்ரோ அனைவரும் அறிந்த உலகப் பிரசித்தி பெற்ற கவர்ச்சி நடிகை. அவர் படங்களைப் பிளேபாய் இதழும் பிரசுரித்துக் கட்டுரை வழங்கியது. டைம், லைஃப் போன்ற உயர்தரப் பத்திரிகைகளும் அவர் படங்களைப் போட்டு எழுதின. வித்தியாசம் என்னவென்றால் பிளேபாய் அவரது நிர்வாணப் படத்தைப் போட்டு அதற்கேற்ப எழுதியது. டைம்-லைஃப் முதலியன அவர் முகத்தைப் பிரசுரித்து அவரது ஆற்றல்களைக் கணித்தன. ஆக, அணுகு முறைதான் முக்கியம். எனவே பாவம், இந்தியா டுடே வருத்தப்பட வேண்டாம். கர்சீப் எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொள்ளட்டும்.

● ரா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

*? கவிஞர் - கவிஞரக இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?*

! இன்றைய நிலையில் அப்படியொன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. எல்லோருமே "கவிஞரக" என்றுதான் தங்களைத் தாங்களே வர்ணித்துக் கொள்கிறார்கள்!

● சிப்பிக்குள் ராமன், வேப்பத்தூர்.

*? முன்பு உணவு அமைச்சர் பதவியில் இருந்து நீக்கப்பட்ட கே. ராஜாராம் இப்போது கட்சியிலிருந்தே நீக்கப்பட்டிருப்பது பற்றி..?*

! சுப்பிரமணிய சுவாமியோடு சேர்ந்து கொண்டு முதல்வரைப் பதவி விலகச் சொன்னால் சும்மா இருப்பார்களா? இதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் முன்பு மந்திரி பதவியிலிருந்து நீக்கப்பட்டது ஏன் என்பதுதான் புதிர்!

● செ. பாலமுருகன், மங்கநல்லூர் பஜார்.

*? நமது அரசோ மதச்சார்பற்ற அரசு. அப்படியிருக்க ஆயுத பூஜையன்று போக்குவரத்துக் கழகங்களும் அரசு அலுவலகங்களும் பூஜை போடுவது ஏன்?*

! ஆயுத பூஜை என்பது ஒரு மதச்சார்பான பூஜை என்பதை விட, செய்யும் தொழிலை வணங்கும் தினம் என்பதே அதிகப் பொருத்தமுடையது. 'செய்யும் தொழிலே தெய்வம்' என்று வணங்கும் மனப்பான்மை குறைந்து வருவதால்தான் தீபாவளி போனஸ் வாங்கிய கையோடு பயணிகளை நடுத் தெருவில் நிறுத்தி விட்டு பஸ் ஓட்டுனர்களும் நடத்துனர்களும் தீபாவளி ஷாப்பிங் போய் விடுகிற அவலம் இங்கு நடக்கிறது! கடமை உணர்வை ஊட்டத்தான் ஆயுத பூஜை.

● எஸ். குருசேகர், வயலோகம்.

*? பங்காரப்பா விஷயத்தில் பிரதமரின் போக்கு சரிதானா?*

! 'முற்றிலும் சரியான விதத்தில் நடந்து கொள்கிறார்' என்று கூற முடியா விட்டாலும், 'ஆட்சியில் இரண்டாண்டு நீடித்ததை அரசுச் செலவில் தாம் தூம் பண்ணி, தமுக் கடித்துக் கொண்டாட பங்காரப்பா எண்ணியது தவறு' என்று புரிய வைத்த அளவில் பிரதமரின் போக்கு சரிதான்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஏ. சுகுமார்,
4/78, நடுத் தெரு,
காட்டுக்காளூர்,
632 312



# பார்க் டவுன் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை-600 003. ☎ : 582676

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5 | 19% | 20% |

## தனயோகம் டிபாசிட் திட்டம் - வட்டி வீதம் 20%

குறைந்த அளவு டிபாசிட் ரூ.20,000/- காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி

உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்

5-ம் ஆண்டு முடிவில் ரூ.6000/-ஐத் திரும்பப் பெறுவீர்

10-ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்

15-ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ.50,000/- பெறுவீர்

## பென்ஷனர் நலத்திட்டம்

முதியோருக்கென்றே அளிக்கப்படும் திட்டம்

சேமிப்பு ரூ.13,000/- வட்டி வீதம் - 19% கால வரம்பு 12 மாதங்கள் மட்டுமே

முன்னதாகவே பெறும் காசோலைகள், விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் சேர்ந்து பயன் பெறலாம்.

### ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| பிரதி மாத டிபாசிட் | ரூ. 25/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும் மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ.25 | 330 | 715 | 1,180 | 1,800 | 2,510 | 3,350 | 4,370 |
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ

ரூ.7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,20,000/- பெறலாம்

ரூ.9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,44,000/- பெறலாம்

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள், நகைக்கடன் சவரனுக்கு ரூ.2400/- வட்டி விகிதம் ரூ.1.85 கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை. R.D கட்ட வேண்டியதில்லை...

(Friday Weekly Holiday.)

*கௌரவ ஆலோசகர்:*
P. பாலசுப்ரமணியம், B.Sc
*முதன்மை அறங்காவலர்,*
*கந்த கோட்டம், சென்னை-3*

*இயக்குநர் குழுத் தலைவர்*
R. விவேகானந்தன், B.Com.

*பங்குதாரர்களுக்கு மட்டும்:* Business Hours: Week Days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.

—— சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி ——

SURESH

# உரிமைக்குரலின் வெற்றி!

**எம்**. ஜி. ஆர். என்னை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்து விட்டுச் சொன்னார் :

''பாடல்களைக் கண்ணதாசன் எழுது வதில் எனக்கு ஆட்சேபணை இல்லை என்று நான் சொன்ன பிறகும், வாலியைப் பாடல் எழுதச் சொன்னது உங்கள் இஷ்டம். 'உங்கள் முடிவில் நான் தலையிட மாட் டேன்' என்று நான் கூறியதும் உண்மை. ஆனாலும் என் அனுபவத்தில் உங்களுக்குச் சொல்கிறேன். கண்ணதாசன் எழுதிய அந்த இரு பாடல்களும் அருமையானவை. அவற்றை அப்படியே நீங்கள் உபயோகித் துக் கொண்டால் பிரமாத 'ஹிட்' ஆகும்!''

இதைக் கேட்டதும் நான் திகைத்துத் தான் போனேன். 'எம்.ஜி.ஆரை அரசியல் ரீதியாக எதிர்த்துக் கொண்டிருந்த கண்ண தாசன் பாடலைச் சேர்க்க வேண்டாம்' என் பது விநியோகஸ்தர்களின் ஏகமனதான கருத்து. ஆனால் எம்.ஜி.ஆரே நேர் விரோத மாகச் சொல்கிறார்! நான், 'மேலும் மேலும் யோசித்துக் குழம்பிக் கொண்டிராமல், எம்.ஜி.ஆரின் அறிவுரைகளையே ஏற்பது' என்ற முடிவுக்கு வந்தேன். ''விழியே கதை எழுது,'' ''ஆம்பளைங்களா?'' ஆகிய இரு பாடல் காட்சிகளையும் உரிமைக் குரல் படத்திலிருந்து நீக்காமல் பயன்படுத்திக் கொண்டேன். அவை பிரமாத 'ஹிட்' ஆகின என்பது உங்களுக்கு நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், கண்ணதாசன் எம்.ஜி. ஆரை அரசியல்ரீதியாக எதிர்த்து வந்தபோ திலும், அந்தப் பாடல் காட்சிகளை மக்கள் பார்த்த போது, கண்ணதாசனை எண்ண வில்லை! அவர்கள் நினைவில் இருந்தது எம்.ஜி.ஆரும் அவரது கதாநாயகியாக நடித் தவரும்தான். அதனால் 'இந்தப் பாட்டு எம்.ஜி.ஆரை எதிர்ப்பவரால் எழுதப்பட்ட தாயிற்றே?' என்றெல்லாம் அவர்கள் யோசித்துக் கொண்டிருக்கவில்லை! இந்த மனோதத்துவத்தை எம்.ஜி.ஆர். நன்றாகப் புரிந்து வைத்துக் கொண்டிருந்தார். அத னால் தான் அவ்வளவு உறுதியாகச் சொல்லி யிருக்கிறார். இதைப் புரிந்து கொண்ட போது, எம்.ஜி.ஆரிடம் எனக்கு இருந்த மதிப்பு இன் னும் சற்று உயர்ந்தது.

''**எம்**.ஜி.ஆர் - ஸ்ரீதர் காம்பினே ஷன் ''கிளிக்'' ஆகாது'' என்று பட உலகில் ஒரு செய்தி பரப்பப்பட்டது என்று முன்பே சொன்னேன். இந்தப் பிரசாரத்தைக் கேட் டுக் குழம்பியவர் மரைக்காயர் என்ற ஒரு விநியோகஸ்தர். அவர், கோயமுத்தூரில் விநியோக உரிமை வாங்கியிருந்தார். யானிம் குரூப்பைச் சேர்ந்தவர். இவர் தமது உரிமையை வேறு விநியோகஸ்தருக்கு விற்று விடக் கூட முயன்றார். முடிய வில்லை! இதனால், ''அவசரப்பட்டு 'உரி மைக்குரல்' உரிமை வாங்கி விட்டோமே'' என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.

படம் ரிலீஸ் ஆனது. சூப்பர் ஹிட்! எம்.ஜி.ஆர். ரசிகர்கள், ''பிரமாத எம்.ஜி. ஆர். படம்'' என்றனர். ஸ்ரீதர் ரசிகர்களோ, ''எம்.ஜி.ஆரை வைத்துப் படம் எடுத்தபோ திலும், ஸ்ரீதர் தனது தனித் தன்மையை விட் டுக் கொடுக்கவில்லை'' என்றனர். விநியோ கஸ்தர்கள் அனைவருக்கும் சந்தோஷம் என் றால், கோவை மரைக்காயருக்கோ இரட் டிப்புச் சந்தோஷம்!

உரிமைக் குரலின் வெற்றி, சித்ராலயாவை நிதி நெருக்கடியிலிருந்து பெரும் அளவுக்குக் காப்பாற்றி மீட்டது. 'அடுத்து



● 'வைர நெஞ்சம்'

டைரக்டர் ஸ்ரீதர்

என்ன செய்வது?' என்று யோசித்த போது, பாதியில் நிற்கும் சிவாஜி நடித்த ''ஹீரோ-72'' படத்தை முடிப்பதுதான் முதல் கடமை என்று தோன்றியது. நான் எம்.ஜி.ஆரை வைத்துப் படம் எடுத்தது சிவாஜிக்குத் திருப்தி அளித்திருக்க முடியாது. என்றாலும் மனக்குறை ஏதும் இருந்தால், அதை மறந்து விட்டுக் கால்ஷீட் கொடுத்தார்.

படமும் முடிந்தது. 72ம் வருஷம் முடிந்த பிறகு ரிலீஸ் ஆகிறது என்பதால் ''ஹீரோ-72'' என்ற பெயரை ''வைர நெஞ்சம்'' என்பதாக மாற்றினேன். படம் சுமாராக ஓடியது. பெரிய அளவில் வெற்றி என்று கூற முடியாது.

**எம்**.ஜி.ஆரும் நானும் இணைந்து பணியாற்றிய ''உரிமைக் குரல்'' பிரமாத வெற்றி அடைந்ததன் விளைவாக, அடுத்த படி மறுபடியும் இதே காம்பினேஷனில் படம் எடுக்கத் தீர்மானித்தோம். ''நானும் ஒரு தொழிலாளி'' என்பது புதிய படத்துக்கு நான் கொடுத்த தலைப்பு. எம்.ஜி.ஆர். பூரண ஒத்துழைப்புத் தர, இரண்டு நாள் ஷூட்டிங் நடந்தது. ஏனோ, இந்தக் கட்டத்தில் எனக்கு ஒரு தயக்கம் வந்து விட்டது! 'கதை திருப்திகரமாக இல்லை' என்று தோன்றி விட்டது. எம்.ஜி.ஆரிடம் போய், ''என்னவோ, கதை திருப்தியாக அமையாதது போலவே ஒரு எண்ணம் இருந்துக் கிட்டிருக்கு. இந்த நிலையில் ஷூட்டிங் தொடர்வது சரியாகத் தோணலை'' என்றேன். அவரும் அதை ஏற்றுக் கொண்டு, ''அதுக்கென்ன, வேறு கதை ரெடி பண்ணுங்க; கொஞ்ச நாள் போகட்டும். மறுபடி படப்பிடிப்பு ஆரம்பிக்கலாம்'' என்று இலேசாக எடுத்துக் கொண்டு பேசினார்.

இதற்குள் நான் மூன்றே மூன்று கதா பாத்திரங்களுடன், ஒரே ஒரு இன்டோர் - ஒரே ஒரு அவுட்டோர் என்று நிலைக் களன்கள் உருவாக்கி, புதுமையான கதை தயாரித்தேன். அது, புதுமைக் கதை என்பதோடு, ''கிளாஸ்'' கதை. 'தமிழில் எடுபடாது' என்ற பயம் எனக்கு இருந்தது. காரணம், 'அவளுக்கென்று ஓர் மனம்', 'அலைகள்' போன்ற என் படங்கள் அடி வாங்கியிருந்ததை நான் மறக்கவில்லை. 'தெலுங்கில் எடுக்கலாமா?' என்று யோசித்தேன். அங்கே என்.டி.ஆர்., நாகேஸ்வரராவ் போன்ற பெரிய நட்சத்திரப் படங்களுக்குத் தான் மக்களிடையே செல்வாக்கு இருந்தது. 'இது சரிப்படாது' என்று விட்டு விட்டேன். கன்னடத்தில் அப்போது ''கிளாஸ்'' படங்கள் நிறைய வந்து கொண்டிருந்தன. எனவே, என் மூன்று கேரக்டர்கள் கதையைக் கன்னடத்தில் எடுக்கத் தீர்மானித்தேன்.

**இ**ந்தப் படம் எடுக்க வீனஸ் பிக்சர்ஸின் ...ங்களூர் விநியோகஸ்தர்களைச் சந்தித்து, 'முதலீடு செய்ய முடியுமா? விநியோக உரிமை ஏற்க முடியுமா?' என்று கேட்டு வர நினைத்தேன். நண்பர் ஸ்டில் சாரதியுடன் பெங்களூர் புறப்பட்டுப் போனேன். உட்லண்ட்ஸில் தங்கினோம். மறுநாள் அங்கிருந்து காரில் புறப்பட்டோம். பெங்களூரில் காந்தி நகர் என்ற பகுதியில் சினிமா விநியோகக் கம்பெனிகள் நிறைய உண்டு. அந்தப் பக்கம் கார் செல்லும் போது ''ஈஸ்வரி பிக்சர்ஸ்'' என்ற போர்டு கண்ணில் பட்டது. உடனே சாரதி, ''ஈஸ்வரி பிக்சர்ஸ் அதிபர் என் நண்பர். பெங்களூருக்கு வந்து விட்டு அவரைப் பார்க்காமல் போனால் வருத்தப்படுவார். ஒரு நிமிஷம் 'ஹலோ' சொல்லி விட்டு வந்து விடுகிறேன்'' என்று கூறி, காரை நிறுத்தச் சொல்லி, இறங்கிச் சென்றார்.

போனவர் சற்று நேரத்தில் ஈஸ்வரி பிக்சர்ஸ் அதிபர் வீராசாமியுடன் காருக்குத் திரும்பி வந்தார்! வீராசாமி, ''நீங்க காரில் காத்து இருக்கிறதா சாரதி சொன்னார்... நான் இருக்கும் போது நீங்க ஏன் இன்னொரு விநியோகஸ்தரைத் தேடி அலையணும்? நீங்க ரூமுக்குப் போங்க. நான் சாயந்திரம் வந்து பார்க்கிறேன்!'' என்றார்.

சொன்னபடியே வீராசாமி வந்து விட்டார். கதையைக் கேட்டார். அவருக்கு ரொம்பப் பிடித்து விட்டது. மறுநாளே நடிக நடிகையரையும் ''புக்'' பண்ணி விட்டோம்! அடுத்த மாதமே ஷூட்டிங் ஆரம்பித்து, இரண்டே மாதங்களில் படத்தை முடித்து ரிலீஸ் செய்தேன்! படம் ஸக்ஸஸ்!

நினைத்தது ஒன்று; நடப்பது ஒன்று என்பார்களே, அப்படித்தான் ஒரு வெற்றிப் படத்துக்கு நாங்கள் யாருமே சற்றும் எதிர்பாராத விதத்தில் வீராசாமி கைகொடுத்து உதவினார்!

'**அ**டுத்து என்ன படம்?' என்று யோசித்துக் கொண்டிருந்த வேளையில், மதன் என்ற ஃபைனான்சியரும் சடையப்ப செட்டியார் என்ற தயாரிப்பாளரும் என்னை அணுகினார்கள். ''நாம் மூன்று பேரும் பார்ட்னர்களாய் இருந்து, எம்.ஜி.ஆரை வைத்துப் படம் எடுக்கலாம்'' என்றனர். நான் ஒப்புக் கொண்டேன். எம்.ஜி.ஆரோ, சம்மதம் அளித்தது மட்டுமின்றி, ''கதையைக் கூட நான் கேட்க வேண்டாம்; ஷூட்டிங்குக்கு முதல் நாள் வந்து என் கேரக்டர் என்ன என்று விளக்கிச் சொல்லுங்க, போதும்'' என்றார்.

அவர் என் மீது கொண்டிருந்த அபார நம்பிக்கை எனக்குச் சந்தோஷமளித்தது. அந்தப் படமும் ஷூட்டிங் ஆரம்பித்து மளமளவென்று வளர்ந்தது. ஆனால் ஒரு கால கட்டத்தில் படத்தின் வளர்ச்சி தடைப்பட்டது. அதற்குக் காரணம் - நான்தான்!

படம் உதவி : ஃபிலிம் நியூஸ்ஆனந்தன்



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

# நங்கநல்லூர் வாசிகளுக்கு நவீன பாதுகாப்புப் பெட்டகங்கள்...



லக்ஷ்மி பாதுகாப்புப் பெட்டகங்களில் உங்கள் விலை மதிப்புள்ள பொருள்களைப் பத்திரமாகவும் பாதுகாப்போடும் வைத்துவிட்டு நிம்மதியாக இருங்கள்!

**பி.ஜி. சரண்யன்**
சேர்மன்

மேலும் விவரங்களுக்கு அணுகவும்:

**LTC லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட்**

138, காலேஜ் ரோடு, நங்கநல்லூர்,
சென்னை-600 114.
போன்: 2346066

*டெபாசிட்டுகள் • தவணை முறை நிதியுதவி • லீஸிங் • ஷேர் புரோக்கிங் சேவைகள்.*

ADWAVE/LTC/4468 TAM

---

# உங்கள் ஜாதக பலனை கேட்டறியுங்கள்

# ஜோதிட போன்

## வார பலன்கள்

**☎ 001 609 936 34 + [ ][ ]**

மேலே கொடுத்துள்ள பதினொரு எண்களையும் டயல் செய்வதுடன் உங்கள் சூரிய ராசிக்கு கொடுத்துள்ள இரண்டு எண்களையும் சேர்த்து டயல் செய்யவும்


51 மேஷம்


52 ரிஷபம்


53 மிதுனம்


54 கடகம்


55 சிம்மம்


56 கன்னி


57 துலாம்


58 விருச்சிகம்


59 தனுசு


60 மகரம்


61 கும்பம்


62 மீனம்

## டாரட் பலன்கள்

93 பண்டைய ஆரூட முறை. உங்கள் குறிப்பிட்ட கேள்விகளுக்கு பதிலளிக்கிறது.

**001609 936 3450**

## பொருத்தம்

நீங்களும் உங்கள் துணையும் எவ்வாறு ஒத்துப்போக முடிகிறது?

**001609 936 3474**

Anthem

# அன்புள்ள அருண் கண்மணி,

Happy Deepavali!

பட்டாசு விடும் போது ஜாக்கிரதையாக ஷூ போட்டுக் கொள். செருப்பு வேண்டாம். அவசரத்தில் கழன்று நழுவி விட்டுடும். ஃபுல் பாண்ட் போட்டுண்டு பட்டாசு விடாதே. தரைச் சக்கரம் மாதிரியான வாணங்களிலிருந்து தீப்பொறி பட்டால் பாழாகிடும்.

...இத்தனை நேரம் அத்தையின் அட்வைஸைப் பொறுமையாகப் படித்தாயே... அதற்காக ஒரு சர்ப்ரைஸ் :

நீ ரொம்ப ஆசைப்பட்ட He-Man பொம்மையைத் தீபாவளி பரிசாக உனக்கு வாங்கி அனுப்பியிருக்கேன். மௌலி மாமா கொண்டு வந்து தருவார்.

He Man எப்படி கெட்டவர்களையெல்லாம் சண்டை போட்டு அழிக்கிறான்! நம் தீபாவளி கதையும் அதைப் போல்தான். நரகாசுரன் கிற பொல்லாத ராக்ஷஸனைக் கடவுள் கிருஷ்ணர் அழிச்சார். அவன் உயிரை விடற சமயத்தில் ரொம்பவும் வருத்தப்பட்டான். இவ்வளவு நாளா எல்லாருக்கும் கொடுமை பண்ணினதுக்குப் பரிகாரமா கடவுள் கிட்டே ஒரு வரம் கேட்டான். தான் இறந்து போன தினத்தை எல்லாரும் சந்தோஷமாகக் கொண்டாடணும்னு கேட்டுண்டான். கிருஷ்ணர் அப்படியே ஆகட்டும்னு அவனுக்கு வரம் கொடுத்தார். அதனாலதான் இன்னிக்கு அந்த நாளில் புது ட்ரெஸ், பட்டாசு, பட்சணம்னு ரொம்பக் குதூகலமா இருக்கோம்.

He Man கதை மாதிரியே இருந்தாலும் அதுக்கும் நரகாசுரன் கதைக்கும் வித்தியாசம் இருக்கு...

கொஞ்சம் யோசிச்சுப் பார்... அந்த வித்தியாசம் உனக்கே புரியும்... என்ன? புரியலையா? அப்போ இந்த லெட்டரைக் கவிழ்த்து வைச்சுப் படி...! யோசிக்காமலே லெட்டரைத் திருப்பிடாதே!

பப்புவுக்கும் உனக்கும் என் ஆசை முத்தங்கள்.

இப்படிக்கு,

அப்பு அத்தை

நரகாசுரன் எல்லாருக்கும் கஷ்டம் கொடுத்தாலும் கடைசியில் அவன், தான் செய்ததெல்லாம் தப்புனு உணர்ந்தான். அதுக்காக வருத்தப்பட்டான். ஆனால், ஸ்கெலட்டர், ஈவில் லின் மாதிரி இருக்கற ஹீ மேனின் எதிரிகளெல்லாம் மேலே மேலே சண்டை போட்டுக்கிட்டே இருக்காங்க - அவங்க எப்பவுமே தாங்கள் பண்ணின தப்பை உணர்றது இல்லை. நல்லவங்களா மாறுறதேயில்லை... அதனால ஹீ மேனும் எப்பப் பாரு சண்டை போட்டுக்கிட்டேயிருக்க வேண்டியிருக்கு...

அப்படி சண்டை போட்டுக்கிட்டேயிருந்தா தீபாவளி மாதிரியான சந்தோஷங்களெல்லாம் இருக்குமா? இருக்கவே இருக்காது!

# மத்தியதரக் குடும்பங்களுக்கு உயர்தர மருத்துவமனை

**ப**ரம்பரையாகத் தொழிலகங்களும், தொழிற்சாலைகளும் திறம்பட வெற்றிகரமாக நடத்தி வரும் புகழ்பெற்ற டி.வி.எஸ். குடும்பத்தில் பிறந்தவர் டாக்டர் எஸ். ரங்கராஜன். தாம் படித்த சார்ட்டர்ட் அக்கவுண்டன்ஸியும், அமெரிக்க எம்.பி.ஏ.வும், தொழிலகத்தில் ஏர்கண்டிஷன்ட் அறை வேலையும் அவருக்கு அலுப்பைத் தந்தன. மக்களோடு தொடர்பே இல்லாத, சுயமான ஈடுபாடு இல்லாத இந்தத் துறையில் தொடர்ந்து பணியாற்றத்தான் வேண்டுமா என்று யோசித்தார் இந்த இளைஞர். தகப்பனார் டி. எஸ். சந்தானம், முதலில் மகனின் யோசனையை அங்கீகரிக்காவிட்டாலும், பிறகு சரி என்று ஒப்புதல் கொடுத்தார். இளைஞர் ரங்கராஜன் மறுபடி பி.யூ.சி. யில் சேர்ந்து (ஜுவாலஜி பாடத்துக்காக) படித்து, மணிபால் மருத்துவக் கல்லூரியில் எம்.பி.பி. எஸ். பட்டம் பெற்று, எம்.எம்.சி.யில் எம்.டி.யும் வாங்கினார். மக்களிடம் நேரடியாகத் தொடர்பு கொண்டு அவர்களுக்குச் சேவை செய்யும் வாய்ப்புக்கு இவ்வாறு கல்வி ரீதியாகவும் தொழில் ரீதியாகவும் தகுதி பெற்றார்.

''ஸோ, உங்கள் எண்ணம் நிறைவேற ஒரு மருத்துவமனை உருவாகப் போகிறது. உங்கள் குடும்பத் தொழிலகங்கள் உதவியுடன்?''

''ஆமாம். எங்கள் குடும்பம் ஏற்கெனவே நடத்தும் பல அறக் கட்டளைகள் விளம்பரமின்றி அமைதியாக இயங்கிக் கொண்டுதான் இருக்கின்றன. இந்த மருத்துவமனைக்கு முதலில் தேவைப்படும் நிதியுதவியை எங்கள் தொழிலகங்கள் மூலமே அளிக்க இருக்கிறோம். சமுதாயத்திடமிருந்து நாம் எவ்வளவோ நன்மைகள் பெறுகிறோம். அவை எல்லாம் திரும்பச் சமூகத்துக்கே ஏதாவதும் ஒரு வழியில் கிடைக்க நாம் முயல வேண்டாமா என்று நாங்கள் நினைத்ததன் அடிப்படையில் உருவாவதுதான் இந்த மருத்துவமனை.''

அண்ணாநகரில் சாந்தி காலனியை ஒட்டி, 11 ரெவுண்டில் உருவாக இருக்கும் 'சுந்தரம் மெடிகல் ஃபவுண்டேஷன்' மருத்துவமனை, முதல் கட்டத்தில் 60 படுக்கைகளும், இரண்டாவது கட்டத்தில் 100 முதல் 110 படுக்கைகள் கொண்டதாகவும் முழுமை பெறும். இரண்டுக்குமாக மொத்தம் 5 கோடி ரூபாய் செலவிடப்படும். 1994ல் ஏப்ரல் மாத வாக்கில் செயல்படத் துவங்கும்.

**சூ**ப்பர் ஸ்பெஷாலிடி மருத்துவமனைகளுக்கு 15, 20 கோடி ரூபாய் முதலீடு தேவை. வங்கிக் கடனுக்கான வட்டியோடு, பங்குதாரர்களுக்கு வழங்க வேண்டிய டிவிடெண்டையும் கணக்கில் சேர்த்தால், வியாபார அடிப்படையில் நடைபெறும் மருத்துவமனைகள், தம்மிடம் சிகிச்சை பெற வருவோரிடம்தானே இதை எல்லாம் வசூல் செய்ய வேண்டும்? அதனால்தான் சிகிச்சைக்கான செலவும் இங்கே ஐந்து நட்சத்திர விகிதத்தில் அமைந்து விடுகிறது.


● டாக்டர் ரங்கராஜன்


● டாக்டர் விஜயபாரதி


● டாக்டர் அர்ஜுன் ராஜகோபால்



* உருவாக இருக்கும் மருத்துவமனை

சுந்தரம் மெடிகல் ஃபவுண்டேஷன் நிலை வேறுபட்டது. 'கடன் கிடன் வாங்கிச் சேர்த்துக் கொள்ளாதே!' என்ற 'உபதேசமு'ம் டாக்டர் ரங்கராஜனுக்கு ஆரம்பத்திலேயே வழங்கப்பட்டிருக்கிறது.

"குடும்ப டாக்டர்கள் முறை மெள்ள மெள்ளத் தேய்ந்து கொண்டு வருகிறது. இது இருந்தவரை, 'பிரைமரி கேர்' எனப்படும் ஆரம்ப கவனிப்பு இருந்து வந்தது. இப்போது கிட்டத்தட்ட இல்லை. எனவே, அந்தப் பகுதியில் உள்ள மக்களோடு பேசுமுன், அங்குள்ள மக்களுக்கு இதுவரை சேவை செய்து வரும் மருத்துவர்களிடமும் பேசி, அவர்களுக்கு இந்த மருத்துவமனை எந்த அளவுக்கு உதவக்கூடும் என்பதையும் எடுத்துச் சொல்ல இருக்கிறோம்!" என்கிறார் டாக்டர் ரங்கராஜன். "இது முழுக்க முழுக்க மத்தியதர மக்களையும், கீழ்த்தட்டு மக்களையும் மனத்தில் கொண்டே உருவாக்கப்பட்டது! அதனால் சேவை முக்கியமே தவிர, லாபம் அல்ல! அந்தச் சேவை உயர் தரமாயிருக்கும்."

சுமார் 40 சதவிகித புறநோயாளிகளுக்கு இலவச மருத்துவ வசதியும், 10 சதவிகித உள்-நோயாளிகளுக்கு இலவச சிகிச்சையும் அளிப்பது இவர்கள் திட்டம்.

"தேவைப்பட்டால் எங்கள் பேஷண்டுகளை சூப்பர் ஸ்பெஷாலிடி மருத்துவமனைகளில் உள்ள கைதேர்ந்த மருத்துவர்களிடம் சிபாரிசு செய்து அனுப்பி வைப்போம். அவர்களும் நியாயமான கட்டணங்களைப் பெற்றுக் கொண்டு, இம் மாதிரி நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிப்பார்கள்" என்கிறார் டாக்டர் ரங்கராஜன்.

"மார்பிளும், கிரானைட்டும் போட்டுப் பளபளவென்று மருத்துவமனையை இழைக்கும் உத்தேசமில்லை. அதே போல சென்ட்ரல் ஏர்கண்டிஷன் அமைப்பும் கிடையாது.

"அர்ஜுன் ராஜகோபால் திறமையான ஒரு மருத்துவர். அவர் என்னுடன் பணியாற்ற இசைந்திருக்கிறார். அது போல சேவை மனப்பான்மை கொண்ட திறமை மிகுந்த மருத்துவர்கள் பலர் இதில் பங்கு கொள்ளப் போகிறார்கள். தொழிற்சாலைகளை அடுத்துள்ள பகுதியாதலால், 'ஆகுபேஷனல் ஹெல்த்' சம்பந்தமான பகுதியும் இருக்கும். ரோடரி சங்க உதவியுடன் தடுப்பு ஊசிகள் பெற்றுக் குழந்தை மருத்துவத்துக்கு உதவும் எண்ணமும் இருக்கிறது."

'டாக்டர் அர்ஜுன் ராஜகோபால் ஒரு தூண்டுதலாய் இருந்தார்' என்று டாக்டர் ரங்கராஜன் குறிப்பிட்ட போது, "அவர் மட்டும்தானா?" என்று கேட்டோம்.

தயங்கியபடியே சொன்னார் டாக்டர் ரங்கராஜன் :

"இல்லை. என் மனைவி விஜயாபாரதியும்தான்! அவளும் ஒரு டாக்டர். பல் மருத்துவர். பலமான தூண்டுதல் என் மனைவியிடமிருந்தும் வந்தது!"

- சாருகேசி

"இந்த எம்.எல்.ஏ. வோட சின்ன கட் அவுட்டை வேறே எடத்தில வைக்கலாங்க.... இங்க வேண்டாம்!"

"ஏம்ப்பா?"

"எவ்வளவு முயற்சி பண்ணினாலும் நேரா நிக்க மாட்டேங்குது... தலைவியோட பெரிய கட் அவுட் காலில் விழுந்துக்கிட்டேயிருக்குது!"

- எஸ். ரமேஷ்.



◆ தலையங்கத்தில் முதல்வரின் கருத்தைப் பாராட்டி நடுநிலையை மீண்டும் நிரூபித்துள்ளீர்கள்.

திருத்துறைப்பூண்டி, ஜெயசுகந்தி.

**மாற்று முறை மருத்துவர்கள்**

◆ L.M.P. மருத்துவப் படிப்பைத் திரும்ப அரசு ஆரம்பிக்க வேண்டும் என்று கூறியுள்ள தங்கள் கருத்தை நான் வரவேற்கிறேன். மேலும் தற்போது கிராமங்களில் பணிபுரிந்து வரும் மாற்று மருத்துவ முறை (ஹோமியோபதி, ஆயுர்வேத) மருத்துவர்களுக்கு அரசே ஒரு வருடப் பயிற்சி அளிக்கலாம். இதனைச் செயல் முறையில் கொண்டு வந்தால், கி.பி. 2000-ல் எல்லோருக்கும் மருத்துவ வசதி என்கிற இலட்சியத்தை அடைய முடியும்.

பாண்டிச்சேரி, பி. ஆர். ராமமூர்த்தி.

**நம் நாட்டில் மட்டுமே நடக்கும்!**

◆ பி.டி.ஐ. டீ.வி. பற்றிய போட்டி கட்டுரை புதியவை உணர்த்தியது. நம் நாட்டில் தயாரித்த படம் - வெளிநாட்டவர்கள் பார்க்கலாம். நம் நாட்டவர் பார்க்க டீ.வி.யில் தடை! இது போல் நிகழ்ச்சி நம் நாட்டைத் தவிர வேறு நாட்டில் நடக்காது!

தென்காசி, எஸ். ஜெகன்.

**அநியாயம்!**

◆ இரண்டே இரண்டு சிறுகதைகள்தானா? ரொம்ப ரொம்ப அநியாயமுங்க!

அருகந்தம்பூண்டி, மலை அரசன்.

**'சூழ்நிலை வன்மம்' புகாதிருக்க...**

◆ குண்டர்கள் தடைச் சட்டத்தின் பிடியிலிருக்கும் போது மனத்தில், 'சூழ் நிலை வன்மம்' புகாதிருக்க இறைவனின் அனுக்கிரகம் வேண்டும் - "வைரமுடைய நெஞ்சு வேண்டும்" - மனத்தில் தங்கிய சிறுகதை.

சென்னை - 3, 'பார்க்டவுன் பரதேசி'.

**பசுத்தோல் போர்த்திய புலிகள்!**

◆ மக்களின் பிரச்னைகளைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்தி, அதன் மூலம் அரசியல் ஆதாயம் தேடிக் கொள்ளும் சுயநல வாதிகளை வெகு இயற்கையாகப் படம்பிடித்துக் காட்டியது 'ஜெரா'வின் சிறுகதை 'மனிதச் சங்கிலி'. கதாசிரியருக்குப் பாராட்டுக்கள்.

தஞ்சை, ஆர். தனலெட்சுமி.

**படித்தேன்; சிலிர்த்தேன்!**

◆ துவண்ட கால்கள் துவளாத உள்ளம்! படித்தேன். மெய்சிலிர்த்தேன்! பல வீராங்கனைகளின் சரிதம் படித்திருக்கிறேன். அவர்களில் ஒருவராகவே நினைக்கிறேன் நீச்சல் வீராங்கனை ஜானகியை. உன்னால் முடியும் தம்பி என்று சொன்ன எம். எஸ். உதயமூர்த்தியின் கனவை நனவாக்கியவர்களில் ஜானகி முதல் பரிசு பெறத் தகுதியுள்ளவர்.

கும்பகோணம், டி. எஸ். சீதாராமன்.

◆ ஊனத்தையே சவாலாக ஏற்று, கால்களின்றி நீச்சலில் சாதனை புரியும் ஜானகி அவர்கள், சாதாரண பெண் பிறவியாக எனக்குத் தோன்றவில்லை... அவரைப் பற்றி கவர்ஸ்டோரி வெளியிட்டதன் மூலம் மற்ற ஊனமுற்றவர்களுக்குக் கல்கி உரமூட்டி, உயர்வுக்கு வழியும் காட்டியுள்ளது.

ஊட்டி - 1, செம்பை. இரா. சா. கார்த்திகேயன்.

◆ கால்களைக் கொண்டு நீந்தும் பயிற்சியைக் கைகளால் மட்டுமல்ல - மனத்தின் ஒரு குறிக்கோளாலும் மேற்கொண்டு இங்கிலீஷ் கால்வாயை நீந்திய ஜானகியின் சாதனை ஒலிம்பிக்கில் தங்கப் பதக்கத்தைத் தட்டிப் பறித்து வந்த செயலுக்கு ஈடானது.

பாண்டிச்சேரி, நா. செல்வராசன்.

**அழகல்ல!**

◆ 'எதிர்க்கட்சிகளின் பல்முனைத் தாக்குதல்களால், ஜெயலலிதாவை அசைக்க முடியாது' என்ற ரீதியில், கார்ட்டூன் போட்டிருப்பது - உமது அறிவார்த்தமான பெருமைகளுக்கு அழகல்ல. சிறுதுளிதானே பெரு வெள்ளம்?!

கரூர், எம். சம்பத்.

**பாரதியை மகிழ்வித்த 'விஜயா'**

◆ கல்கி 20.9.92 இதழில் "50 ஆண்டுகளுக்கு முன்" பகுதியில் மகாகவி பாரதியார் குடும்பத்துடன் இருக்கும் படம் பிரசுரித்து, அதில், "பின்னால் உள்ள நண்பர்கள் இருவர் யார் என்பது தெரியவில்லை" என்ற குறிப்பு காணப்படுகிறது. பாரதியாருக்குப் பின்னால் முண்டாசு அணிந்து இருப்பவர் D. விஜயராகவாச்சாரியார் என்பவர். இவர் பாண்டிச்சேரி தபால் நிலையத்தில் பாரதி அங்கு வாழ்ந்த காலத்தில் - குமாஸ்தாவாகப் பணியாற்றினார். காரியாலய நேரம் தவிர பாரதியாரோடு காலம் கழிப்பார். பாரதியார் தம்மை "விஜயா" என்று அழைப்பார் என்பதாகவும், கடற்கரைக்குச் சென்று பாரதி பாடல்களை இவரது கனீரென்ற குரலில் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்வார் என்றும் விஜயாவே என்னிடம் கூறியுள்ளார். அந்நாளில் பாண்டியில் பிரிட்டிஷ் தபால் நிலையங்களும் (பிரெஞ்சு தவிர) உண்டு. பிரிட்டிஷ் அரசின் ஸி.ஐ.டி.க்கள் விஜயாவின் போக்கைக் கண்டு "ரிப்போர்ட்" அனுப்ப, விஜயா குண்டூருக்கு மாற்றப்பட்டார்! இந்த வரலாற்றுக் குறிப்பு பாரதி அன்பர்களுக்குப் பயன்படும் என்று கருதி எழுதினேன்.

தேமாண்புரம் (கேரளா), எஸ். பி. ராமமூர்த்தி, ஓய்வு பெற்ற போஸ்ட் மாஸ்டர்.

# உங்கள் கனவு இல்லத்திற்கு மூன்று படிகள்.




# இப்பொழுது சிறப்பானதொரு வீட்டுத்திட்டம் அளிப்போர் யூனிட் ட்ரஸ்ட்.

நீங்கள் யூனிட் டிரஸ்டின் திட்டத்தில் செய்யும் முதலீடு ஹெச்டிஎஃப்ஸியிடம் இருந்து நீங்கள் வீட்டிற்காக கடன் பெற தகுதியுடையவராக்குகிறது. மேலும் 10 ஆண்டு காலத்தில் உங்கள் மேற்கண்ட கடன் மற்றும் அதன் மீதான வட்டியை யூனிட் ட்ரஸ்ட் கட்டுகிறது.

**திட்டம் எவ்வாறு செயல்படுகிறது?**

யூனிட் ட்ரஸ்ட், ஹெச்டிஎஃப்ஸியுடன் இத்திட்டத்திற்காக இணைந்துள்ளது. ஹெச்டிஎஃப்ஸி உங்கள் முதலீட்டின் நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு மூன்று மடங்கும் ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு நான்கு மடங்கும் கடனாகக் கொடுக்கும். உங்கள் முதலீட்டில் சேகரித்த தொகையை யூனிட் ட்ரஸ்ட் பல்வேறுபட்ட வகைகளில் முதலீடு செய்யும்.

- முதலீட்டு அபிவிருத்தியைக் கொண்டு உங்கள் கடன் மற்றும் வட்டியை திருப்பச் செலுத்துவதே யூனிட் டிரஸ்டின் இலட்சியம். ஆனால் அதில் குறைவு இருக்குமேயானால் முதலீட்டாளர் அதை ஈடு செய்ய வேண்டும். முதலீட்டு அபிவிருத்தி அதிகமாக இருந்தால் அந்தத் தொகை முதலீட்டாளருக்கு திரும்ப அளிக்கப்படும்.




**திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்**

- எல்லா தனி நபர் மற்றும் வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர் (NRI) இதில் சேரலாம்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 2,000/- (ரூ. 100 முக விலையில் 20 யூனிட்கள்). அதன் பிறகு ரூ. 1000த்தின் மடங்கில், உச்ச வரம்பு கிடையாது.
- யூனிட்டுகளின் விற்கும் மற்றும் திரும்ப வாங்கும் விலை, முதலீட்டின் நிகர சொத்து மதிப்பின் (நெட் அசட் வேல்யு) மேல் சார்ந்திருக்கும்.
- விசேஷ சூழ்நிலைகளைத் தவிர ஐந்து வருடங்களுக்கு யூனிட்டுகளை திரும்ப விற்க முடியாது.
- வீட்டுக் கடனுக்கு உச்ச வரம்பு 5 லட்சம். கடனுக்கான காலம் 10 வருடங்கள்.
- டிவிடெண்ட் அறிவிக்கப்பட மாட்டாது. வருமானம் மீண்டும் முதலீடு செய்யப்பட்டு மூலதன வளர்ச்சியை அதிகரித்து கடன் மற்றும் வட்டியை திருப்பிச் செலுத்த பயன் படுத்தப்படும்.

இலவச புத்தகத்திற்கு ஏதேனும் யூனிட் டிரஸ்ட் அலுவலகம், முக்கியப் பிரதிநிதி, ஏஜெண்ட் அல்லது ஹெச்டிஎஃப்ஸி அலுவலகத்தை அணுகவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

## யூனிட் ட்ரஸ்ட் மற்றும் ஹெச்-டி-எஃப்-ஸி இணைந்து வழங்கும் திட்டம்

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774

Sista's UTI 1989 92 TM B

# விஜயபாஸ்கரர் வெற்றி பெறுவாரா?



ஆகஸ்டு புரட்சி சமயத்தில் அரசியலில் புகுந்து, கடந்த ஐம்பது ஆண்டு கால அரசியல் வாழ்வில், 'இருப்பதில் பரவாயில்லை' வகை அரசியல்வாதியாகப் பெயர் பெற்றிருப்பவர், விஜயபாஸ்கர ரெட்டி. அந்த வகையில் மட்டுமின்றி உடல்வாகிலும் இந்திய அரசியல்வாதிகளுக்குள்ளேயே இவர்தான் உயரமானவர். ஆறு அடி இரண்டு அங்குலம்!

1920, ஆகஸ்ட் 16 ஆம் தேதி கர்னூலுக்கு அருகே லாட்டகிரி கிராமத்தில் பெரிய மிராசுதார் குடும்பத்தில் பிறந்தவர். பிரும்மானந்த ரெட்டி அமைச்சரவையில் இரண்டாம் இடத்தில் இருந்து, 'தெலுங்கானா தனி மாநிலமாக்கப்பட வேண்டும்' என்ற கிளர்ச்சியை வெற்றிகரமாகச் சமாளித்து, ஆந்திர மாநிலத்தை முழுசாகக் காத்தவர். இதன் பிறகு இவர் மத்திய அமைச்சரவைக்குப் போய்ச் சேர்ந்தார். ஆந்திராவில் ஒருவர் பின் ஒருவராக சென்னா ரெட்டி, அஞ்சையா, பவனம் வெங்கடராம் என்று இந்திரா காந்தி முதல்வர்களை மாற்றிக் கொண்டேயிருந்தார். ஒன்றும் பயனில்லை. காங்கிரஸ் செல்வாக்கு சரிந்து கொண்டே வந்தது. தேர்தலுக்கு நாலு மாதங்களே இருந்த போது 1982ல் விஜயபாஸ்கர ரெட்டியை மத்திய அமைச்சரவையிலிருந்து கழற்றி விட்டு, மாநில முதல்வராக அனுப்பினார் இந்திரா. இவரும் முடிந்த மட்டில் பிரயத்தனப்பட்டார். ஆனால் அது ஆந்திராவில் ராமாராவின் அலை, அனைவரையும் மூழ்கடித்துக் கொண்டிருந்த நேரம். அதைத் தடுத்து நிறுத்த விஜயபாஸ்கர ரெட்டியால் முடியவில்லை. பத்தாண்டுகளுக்கு மேல் மாநில அரசியலில் தொடர்பற்று இருந்தது மைனஸ் பாயிண்ட் ஆனது. காங்கிரஸ் படுதோல்வி அடைந்தபோதிலும் இத் தேர்தலில் விஜயபாஸ்கர ரெட்டி வென்றார். ஆயினும் தார்மிகப் பொறுப்பு ஏற்று ராஜினாமா செய்தார் எம்.எல்.ஏ. பதவியை. விளைவு, மீண்டும் இந்திரா காந்தியின் மத்திய அமைச்சரவையில் கப்பல் மற்றும் போக்குவரத்துத் துறை அமைச்சராக ஏற்கப்பட்டார்.

72வது வயதில் இப்போது மீண்டும் மாநில அரசியலுக்குத் திரும்பியிருக்கிறார் ரெட்டி. இம் முறை, 1994ல் வர இருக்கும் தேர்தலுக்குக் காங்கிரஸைத் தயார் செய்து வெற்றி வாகை சூட வைக்கும் பொறுப்போடு அனுப்பப்பட்டிருக்கிறார்.

சென்னை சட்டக் கல்லூரியில் சட்டம் பயின்ற திரு. ரெட்டி, கல்லூரி நாட்களிலேயே கால்பந்து, ஹாக்கி முதலியவற்றில் மிக்க ஆர்வம் காட்டியவர். இன்றும் தினம் காலை பல கி.மீக்கள் நடக்கிறார். இதனால் 72 வயதிலும் ஆரோக்கியமாக இருக்கிறார். டீ.வி.யில் முக்கியமான மாட்சுகளைப் பார்ப்பதில் இன்றும் இவருக்கு ஆர்வம் உண்டு. இதற்கு அடுத்தபடியாக அவர் விரும்புவது நெருங்கிய நண்பர்களுடன் சீட்டாடுவது. குடும்பப்பற்று அதிகமுள்ளவர். மகன் பிரகாஷ் ரெட்டி ஏற்கெனவே மாவட்ட அளவில் சுறுசுறுப்பான அரசியல்வாதி.

விஜயபாஸ்கர ரெட்டியிடம் பழகியுள்ள அதிகாரிகள் அவர் கண்டிப்பானவர், சுறுசுறுப்பானவர், திட்டமிட்டுப் பணியாற்றுகிறார் என்றெல்லாம் சொல்கிறார்கள். என்றாலும் கூட அவர் சந்திக்க இருக்கும் பிரச்னைகளும் ஏராளம்தான். நக்ஸலைட்டுகள், மின்வெட்டு, வேலையில்லாத் திண்டாட்டம், நாட்டு மதுவை எதிர்த்துப் பெண்களின் போராட்டம் என்று வரிசையாய்த் தலைவலிகள் காத்துக் கொண்டிருக்கின்றன.

மாநிலக் காங்கிரசுக்குள் நிலவும் கோஷ்டி மனப்பான்மைகளை மீறி, மாநிலத்தில் காங்கிரசின் பெயரை மீண்டும் நம்பிக்கைக்குரியதாய் மாற்றும் வேலையை மேற்கொண்டிருக்கிறார் ரெட்டி. பிரதமர் நரசிம்மராவ் இவ்வாண்டு ஜூன் மாதத்தில் நந்யால் மக்களவை இடைத் தேர்தலில் வெற்றி பெற, திட்டம் வகுத்துச் செயல்படுத்தியவர் விஜயபாஸ்கர ரெட்டிதான். அதே போல் வரப் போகும் பொதுத் தேர்தலிலும் காங்கிரஸ் வெற்றி பெற வழிவகுப்பார் என்று பிரதமர் நம்பிக்கை கொண்டிருக்கிறார்.

**– துளசி**

*கார்ட்டூன் : நன்றி : ஹிந்து*

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன், ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Sri Lanka